உ

கடவுள்துணை.

பெரியபுராணம்

அறுபத்துமூன்றுநாயன்மார்களில் ஒருவராகிய

# நந்தனாரென்னும்

# திருநாளைப்போவார்

திவ்வியசரித்திரகீர்த்தனையும்
சிதம்பரக்கும்மியும்

இஃது

சங்கீதசாஹித்திய வித்வாம்ஸராகிய
ஆனைதாண்டாபுரம்
பாரதி
**கோபாலகிருஷ்ணையரால்**
இயற்றப்பட்டு,

சென்னை-இட்டா,
**பார்த்தசாரதிநாயுடு**
அவர்களால்
ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1913.

சென்னை, ஆச்சாரப்பன் தெரு, நெ-84.



உ

கடவுள் துணை.

# கதையின்வரலாறு.

———— :*: ————

திருவெண்ணீறு தரித்த பரமசிவனார் திருக்கொலுவிற்றிருக்கும்வெள்ளிமலையானது இமயமலையின்பக்கத்திலிருக்கின்றது அது பெரியோர்கள் பரிசுத்தமனம்போலும் படிகம்போலும் பலவுலகிற் புண்ணியங்களெல்லாந் திரண்டுருண் டொருவடிவாகப்பிரகாசிக்கின்றதுபோலுமிருக்கிறது. அதில் இருக்கு யஜசு சாமம் அதர்வணம் என்னும் நான்குவேதங்களினோசையும், வித்தியாதரார்கள் வீணையோசையும் யானைகளுடையமுழக்கமும், வானதுந்துமிமுழக்கமும் இடைவிடாதிருக்கின்றன அன்றியும் தேவர்கள் சிரமாலைகளும், கற்பகமாலைகளும்கண்டு பற்பலமுனிவர்க ளஞ்சலிசெய்து சார்ந்த மலர்மாலைகளும், அம்மலைப்பக்கங்களெங்கு நெருங்கியிருக்கின்றன. அது அமரர்சித்தர் அசுரர் தைத்தியர் கருடர்கிந்நரர் முனிவர் உரகர் ஆகாயவாசிகள்போகபூமியர்என்னும் இப்பதினெண்கணங்களுந் துதிக்கப்படத் தக்கது, அக்கயிலாயமலையின்மேல் கோடானுகோடி சூரியப்பிரகாசம்போலும் விளங்குகின்ற நவமணிகள்பதிப்பிக்கப்பட்ட திருக்கோயிலுக்கு முதற்கோபுரவாயிற் காவற்றலைவர் நந்திதேவர் அவர்பரமசிவனுடைய திருப்பணிவிடைகளும், திருக்கொலுவிற்கும் அதிகாரத்தலைவர், அவர் உடைவாளும திருப்பிரம்பும் பெற்றுக் கைலையைக்காக்கப்பட்டவர் தேவர்முதலானயாவருக்கு மேலானவர், பரமசிவனிடத்து அதிகபத்தியும் அன்புமுடையவர் இவரால் இரவும்பகலும் இடைவிடாமல் காக்கப்பட்ட வெள்ளிமலையென்னும் கைலாயத்தில் அடிவாரத்தில் எச்சமயங்களிலும்நிச்சயசமயம் சைவசமயமென்றும் எக்கடவுளிலும்பரமசிவனை மெய்க்கடவுளென்றும் அறிந்தவர், உபமன்னிய மகாமுனிவர் இவர்கிருஷ்ணனுடைய தலையின்மேல் தம்முடைய திருவடிகளைச் சூட்டினவர் இறப்பற்றிருக்கின்றவர், சிவனுடையகிருபையால் திருப்பாற்கடலைகுடித்தவர் சிவனிடத்திடைவிடா தன்புள்ளவர் இந்த உபமன்னிய மகாமுனிவர் தம்மிடத்தில் அடியார்களும்முனிவர்களும் புடைசூழ்ந்திருக்கிற சமையத்தில் அவ்விடத்தில ஆயிரஞ்சூரியகிரணங்கள் ஒன்றாகத்திரண்டாற்போலும்ஒருபிரகாசந்திரண்டுதோன்ற அங்கிருந்தவர்களெல்லாரும் உபமன்னியமகாமுனிவரைநோக்கி இஃதென்ன ஆச்சரியம் இப்படிப்பட்டபிரகாசந் தோன்றவேண்டியகாரணமென்னவென்று கேட்க உபமன்னியர் சிவனைத்தியானித்துச் சொல்லுகிறார், தென்திசையில் ஆதனூரில் அவதரித்த திருநாளைப்போவார் என்னும் திருநாமம் பெற்றவர் சிவனது திருவருளால் வருகிறாரென்று இருகாமு

ஞ்சிரமேற்குவித்து அத்திசையைநோக்கிவந்தனஞ்செய்து ஆனந்த
க்கண்ணீர் அங்கமெங்குஞ்சிந்த உபமன்னியர் துதிக்கும்போது மற்
றவர்கள் தங்களுக்குண்டாகியசந்தேகந்தீரும்படி கேட்கத்தொடங்
கினார்கள்.

எங்களாண்டவராகிய சிவனுடைய திருவடிகளை யல்லால் மற்
றொருதெய்வத்தினடிகளையும் வணங்கமாட்டீரே இப்பொழுதுவண
ங்கவேண்டியகாரணமென்னவென்று முனிவர்கள்கேட்க உபமன்னி
யர்சொல்லுகிறார், கேளுங்கள் பெரியோர்களே முனிவர்களே மற்று
முள்ளவர்களே பரமசிவன் தரிக்கப்பட்ட திருமாலையையும் திருவெ
ண்ணீற்றினையும் அணிகின்றவர் எள்ளிட விடமில்லாது நிறையும்
கொள்ளிட நதிசூழ்ந்த சோழவளநாட்டிலிருக்கும்மேற்காநாட்டில்
ஆதனூரில் தீண்டப்படாதவர் குலத்திலே சேற்றிற் செந்தாமரை
யுற்பத்தியானாற்போலும் நந்தனாரொருவர் பிறந்தார், அவர் விவேக
சூட்சியும் வெட்டிமைத்தனமாகிய காணியாட்சியும் உடையவர். இ
வர் குலாசாரத் தன்மையும் நன்மையுஞ்செய்து மலர்கொய்து தாஞ்
சிவபூசைசெய்து சிவாலயங்களுக்கு அறையும்பேரிகைமத்தளங்களு
க்குத்தோலும் வாரும் யாழுக்குநரம்பும் சுவாமிக்குக்கோரோசனை
யும்முறையாகவும் இறையாகவுங்கொடுத்துவருவார், சிவாலயத்தில்
அந்தசந்நிதியிற்போய்த் தூரத்திலிருந்து மனங்கசிந்துருகிச்சிவனை
ப்பாடியாடிவருகிறநாளில் திருப்புன்கூரில் பரமசிவத்தைத்தரிசிக்க
ஆதனூரிலிருந்துவந்து திருக்கோயிலின் திருவாயலினின்று சிவலிங்
கத்தரிசனைக்காண ஆவலாகவும் காவலாகவும் வணங்கிப் படுக்கை
யில் பரமசிவனார்சந்நிதிக்கு முன்னிருக்கும் நந்திகேசுரரை விலகும்
படிசெய்து காட்சிகொடுத்தருளினார்.

நந்தனார் சுவாமிதரிசனைசெய்துவரும்வழியில் ஒருபள்ளத்தை
க்கண்டு அதைபெருங்குளமாக வெட்டித் தம்முடைய ஆதனூரெ
ன்னுஞ் சேரிக்குப்போனார். இவ்வாறு பலதலங்களையும் வலஞ்செ
ய்து நலஞ்செய்து ஆத்திமலரணிந்த சிவனையேத்திச் சிதம்பரத்திற்
குச்செல்ல மனம்வந்து தம்முடையசாதிகோயிலுக்குட்போக யோ
க்கியமில்லையென்று விசனமடைந்து நாளைக்குப் போவோமென்று
சொல்லியிருந்தார் சிவபணிவிடையாலும் தன்னை வடிமைகொண்டி
ருந்த வேதியருத்தரவு தடையினாலும போகக்கூடாமையால் அநே
கநாள்சென்றன நாளைப்போவோமென்றபடியால் அவருக்குத் திரு
நாளைப்போவாரென்று பெயர்வந்தது அதன்பிறகுதிருநாளைப்போ
வார் சிதம்பரம்வந்ததும் சுவாமி அவருக்குக்காட்சிதந்ததும் ஆகிய
சரித்திரங்களை உபமன்னியமகாமுனிவர் சொல்லக்கேட்டு யாவரும்
பேரானந்தமடைந்தனர் இதனடியிலநொண்டிச்சிந்தினால் தெரிந்து
க்கொள்ளலாம்.

---





உ

சிவமயம்.

# திருநாளைப்போவாரென்னும்

# நந்தனார்சரித்திரக்கீர்த்தனை.

## கற்பகவிநாயகர் துதி.

காப்பு-வெண்பா.

கந்தன் றனையளித்த காதலனார் பேருபெற்ற
நந்தன் சரித்திரத்தை நானியம்பச்—சுந்தாஞ்சேர்
தில்லைபணி கோபுரத்திற் றேடிவளர் கற்பகத்தாள்
அல்லும்பகற்றுணையே யாம்.

## முக்குறுணி விநாயகர் துதி.

விருத்தம்.

நந்தணிகரத்தான் றில்லை நாயகனருளால்வந்த
நந்தன்முக்குறுணியான்றன் னளினபொற்றாள்வணங்கி
நந்தன்பேருட்பாலுண்ட நற்புகழ்ச்சொலிப்பின்பேரா
நந்தமுற்றுலகினுளும் நலமுடன்வாழ்துவேனே.

## சபாபதிதோத்திரம்.

### கலிவிருத்தம்.

தக்ககீர்த்திகொள் நந்தன்சரித்திர
மிக்ககாதையை யெடுத்துவியம்பிடச்
செக்கர்மேனியர் தில்லைச்சபைதனிற்
றக்கத்தோமெனும் தாட்கள்சிரங்கொள்வாம்.

---

## சிவகாமிதோத்திரம்.

### விருத்தம்.

பாம்பினைத்தங்கையாகப் படைத்துப்பின்யெவருங்காணப்
பாம்பினைப்பணியாய்க்கொண்ட பகையருட்பாதமேத்திப்
பாம்பினிற்புலியும்பாம்பும் பார்த்திடநந்தனுர்க்கன்
பாம்படிமுத்திதந்த பழங்கதைபகருவேனே.

---

## சுப்பிரமணியன்-தெய்வயானை-சரஸ்வதி இலக்குமி.

### விஷ்ணு இவர்கள் துதி.

### விருத்தம்.

சச்சிதா னந்த சதாசிவ னருளைச் சார்ந்தநித் யானந்த நந்தன்
உச்சிதக்கதையைக் கீர்த்தனையாக வுலகெலாந்துதித்திடச்சொல்ல
அச்சிலை வேற்கை யறுமுகன் தெய்வ யானைசெங் கலைமகள் கமலை
பச்சைமான் மற்றும் பரவிய தேவர் பாதபங் கயம் பணிகுவேனே.

---

## சூ௩-நாயன்மார் தில்லைமூவாயிரவ ரிவர்கள் துதி.

### விருத்தம்.

வாதவூ ரடியாரோடு மற்றறு பத்து மூவர்
பாதமே வணங்கித் தில்லைப் பதிதனி லுளுமேவும்
போதமூ வாயிரத்தோர் பொன்னடிக் கமல முன்னி
ஓதுநந் தன்சரித்திர முறைத்திடத் துணிந்த தாமே.

## அவையடக்கம்.

### விருத்தம்

சிற்பிகள் காண்போர் சிந்தையும் விழியும்
செப்புகல் லின்புறத் தீட்டும்
விற்பனங் கண்ட வறிவிலா னெழுதும்
விதமென முத்தமி ழென்னுஞ்
சொற்புகழ் கல்வித் துறையெலாந் தெரிந்த
தூயநற் புலவர்முன் கருதிப்
பொற்புற விசைக்குங் கீர்த்தன மிதனைப்
புவிமிசை மதிப்பர்க ளம்மா.

---

### விநாயகர் துதி.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

கணநாதாசரணம் காத்தருள்
கணநாதாசரணம்

அநுபல்லவி.

பணமார்சேஷன்றாங்கிய பார்மீதினிலே நேருங்
குணமார்நந்தன்சரித்திரங் கூறக்கிருபைக்கண் பாரும்(கண)

சரணங்கள்

சொல்லும்ப்ரணவமூலா தூயவேதாந்த நாதா
துலங்குமுனிவர்வன துகளறுத்தருட் போதா
நல்லமோதகமுதல் நாடிநுகர்வி னோதா
நாயேன்சொல்லுந்தமிழை நாடிரட்சிக்குந் தாதா(கண)

அம்பரமானமன்று ளாடும்பர னளிக்க
அரைநொடியினில்வல மாகிமனங் களிக்க
உம்பர்பிரா னுகந்தே வுயர்மாங்கனி யளிக்க
உள்ளந்தளராமலுண்ட முதல்வர் துய ரொழிக்க(கண)

தேஜோன்நவரத்னச் சிகரமேலக் கோபுரத்
தேவிற்றிருக்குமெங்கள் தேவகுண் டலாதர
பூஜித்தவர்க்குவரம் புரிந்தருளும் மாதர
மீமிசைநாடகஞ்செய் புநிதவோ மரஅர(கண)

புராணிகர்சொல்-விருத்தம்.

வளம்பெறத் தருமமோங்கிய வாத
　ஹூரினில் வாழ்ந்திடும் புலையர்
உளமகிழ்ந் தெங்கள் குடிப்பெயர் விளங்க
　வுதித்தநற் றீபமே மணிமெய
களங்கிலாக் கதிரே யெனப்புகழ்ந் தோதக்
　கதித்தசீர் நந்தனார் சரித்திரம்
விளம்பின முதலிற் மீருடயம் படித்து
　மேன்மையு மிகப்படைத் தனமே.

தோடயம்.

இ-ம்-நாட்டை-ஆதிதாளம்.

| | | |
|---|---|---|
| திருவளர்தருமாத | ஹூரர் | செறிபுலைக்குடிலவதாரர் |
| தருமநெறிநந்தனார்ப் | பேரர் | சரித்திரமதனைசொலவே ஆ ஆ |
| அருள்வளர்கஜமுக | சாமி | அம்பிகைதந்தருளும்சாமி |
| அங்குசங்கரதல | சாமி | அம்புயத்தாணிதந்துணேயே-ஜெய |
| வண்டணிமாமலர்த் | தாரன் | மண்டலம்வாழ்த்தியதீரன் |
| மண்டுமெளியற்கு | தாரன் | மன்னுங்கதைசொலவே ஆ ஆ |
| புண்டரீகபுரத் | தீசன் | புராரியுளமகிழ்நேசன் |
| தண்டலர்மாமண | வாசன் | தாமரைத்தாள்கடுணேயே-ஜெய |

விருத்தம்.

சங்கரன்றனக்கும் சண்முகன்றனக்கும் சதுர்முகப்பிரமனுர்த னக்கும், பங்கயமாற்கு மவர்மனேயாட்கும் பாமகட்பாவலர் தமக்கும், தங்கியவட்ட வசுக்களானவர்க்கும் சதுர்மறையோதுமந்தணர்க்கும், பொங்கியமூவா யிரர்நந்தனுற்கும் பொதுப்பட மங்களம் புகல்வாம்.

இராகம்-அசாவேரி-அடதாளம்.

பல்லவி.

ஆதிமத்தியாந்தனுக்கு மங்களம் எங்கள்
ஆநந்தநந்தனுர்க்கு மங்களம்

அநுபல்லவி.

பாதிமதிநதியும் பாம்பும்புலி　　யுரியும்
சோதிக்குழையணியுந் துலங்கவருட்　　புரியும் (ஆதி)

சரணங்கள்.

சிலையைவடிவழகிற்சிறந்த தொருபெண் ணாக்கி
சிலவனைத்தபர சிராமன்கெர்வத்தை போக்கி
மலையைச்சுமந்துபெரு மடுவிலொருகாற் றாக்கி
மாநடனங்கள்செய்த மாயமானினையெய்த ஆதி

குருபரநாதனுக்குங் குறமகட்பாக ருக்கும்
அருணகிரிநாதனுக்க மருள்செய்விசாக ருக்தும்
ஒருமுருகாவென வுளங்களித்தவ ருக்கும்
உம்பர்கோனுக்குகந்த வுபாரசினைத்தந்த ஆதி

சக்கரைமுக்கனியவல் தனைநுகர்ந்த தருக்கும்
சகலதேவர்தமக்குஞ் சகலவசுக்க ளுக்கும்
பக்குவமாகவிதைப் பாடுஞ்சங்கீத ருக்கும்
பார்மகட்குப்பங்கயப் பாவையர்க்குவிஜய ஆதி

---

## பெரியபுராணச் செய்யுள்.

### விருத்தம்.

திருமறையோர் புராணமவை பதிமூன்று சிவமே
தியாரனை வழிபட்ட புராணமீரிரண்டு
குரைகழன்மா மாத்திரரொன் றறுவர்முடி மன்னர்
குறுநிலமன்னவரைவர் வணிகர்குலத் தைவ
ரிருமைநெறி வேளாளர் பதின்மூவ ரிடைய
ரிருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர்
பரதயர்சான் றூர்வண்ணர் சிலைமறவர் நீசர்
பாணரிவ ரோரொருவ ராம்பகருங் காலே.

---

## உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லுகிற

### வசனம்.

இவ்வுலகில், தெரிதாய வேதசாஸ்திரங்களுக்குள்ளே மிகவுஞ் சாரமாகிய பரமசிவபக்தியையுண்டுபண்ணுகின்றபக்திவிலாசத்தை (உபமன்னியபகவானானவர்) அநேகம்ரிஷிகள் கேட்கச்சொல்லுகின் றார். (பெரியபுராண) மென்று சொல்லப்பட்டநூல் சேக்கிழார்சுவா மிகளாலே செய்யப்பட்டது. ஸ்கந்தபுராணத்திலும், இன்னமனே

கபுராணங்களிலுஞ் சொல்லப்பட்ட பத்திமார்க்கங்களாகிற கடலிலே நீரைக் கையாலள்ளிக் குடித்ததுபோலச் சிலது கீர்த்தனங்களினுலும் விருத்தங்களினுலும், சிலபததர்கள் சரித்திரங்களைக்கொண்டாடுவதுபோல உளரினேனென்று ஆனதாண்டாபுரம் கோபாலகிருஷ்ணையன் பெரியோர் அடிவணங்கி ஆனந்தம்பெருகிச்சொல்லிய திருநாளைப்போவார் சரித்திரத்தை யாவரும்வினவக்கேட்கும்படிசிரம்வணங்கி வினவினேன், பாரதம், பாகவதம், பகவற்கீதை, சிவரகசியம், ஸ்காந்தமுதலாகிய பக்திஞான வயிராக்கிய சாஸ்திரங்களிலே மிகவுஞ் சாரமாகிய பரமசிவபக்திபண்ணாமல், இச்சரவேதபராங்கதனாயிருக்கின்ற பிராமணனைப்பார்க்கிலும், பரமசிவபாதாரவிந்தபக்தி பண்ணுகிறவன் பறையனாயிருந்தாலும், பதினான்குலோகத்தையும் பரிசுத்தம் பண்ணுவானென்று உபமன்னியபகவான் சொல்ல, அதற்கு ரிஷிகள்சொல்லுகிறார்கள். பத்தி ஞானவயிராக்கியங்களைதெரியப்படுத்தாநின்ற வேதபுராணங்களைப்பார்க்க அறியாராய், அன்றியில் அவிவேகிகளாயிருக்கிற சண்டாளர்களுக்கு எப்போது பத்திவருமென்று ரிஷிகள் கேட்க உபமன்னிய பகவான் சொல்லுகின்றார்.

திருநாளைப்போவார்சரித்திரமுழுதும் நொண்டிச்சிந்தாகப்பாடியிருப்பதால் முன்னம்சிந்துபாடி அதன்பிறகுசரித்திரத்தின்தொடர்ச்சியில் கீர்த்தனங்களோடும் விருத்தங்களோடும் இடைநடுவில் சிந்து துண்டுதுண்டாகச் சேர்ந்துவரும்.

———*———

## உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லுகிற

நொண்டிச்சிந்து-இ-ம்-புன்னாகவராளி.

பழனமருங்கணையும் - புலைப்-பாடியது கூறைவீடுதனில், சுரை
யோபடர்ந்திருக்கும்- அதைச்சுற்றிலும்நாய்கள் குலைத்திருக்கும்பரு
ந்தோடிவட்டமிடும்- இளம்-பச்சைபிசிதமே-விச்சைகொண்டுகோழி
கூவுங்-கூக்குரலும்-பாழுங்கொல்லையருகினில்வெள்ளெலும்புநரம்
புங்குவித்திருக்கும்-பல-ஈட்டி மிதந்திடுங்குட்டைகளில் நண்டோ
குடியிருக்கும்-சிறுசத்தைகமடம்வலுத்திருக்கும் தோலூறுங்கேணி
களில்-வெகு-தொல்லைப்படும்வாடைசொல்லறியாப்-பரம்போ அடித்
திருக்கும்-வயற்-பக்கங்களில்மெத்தகொக்கெலும்பும்-கிழித்தோல்ந
ரம்புகளும்- அவர்க்-கினமில்லைசிறு மீனுலரும்-தெருவில் விளையாடிக்
கொண்டு- அவர்-தெந்தினம்பாடுவர்சுந்தரமாய்-இலுப்பைமணியரை

யில்கட்டி இண்டந்தலைகள் பூண்டிருக்கும்-சங்குதோடு காதணியும்
அருந்-தாவடமேயவர் தூவிடமாய்-மணியோ தரித்திருப்பார்-தெரு
வாசற்புறத்தினிலேசிக்கிகொண்டு கொண்டாட்டமாயிருப்பார்-கை
யைக்-கொட்டிக்கொண்டுதனக் கிஷ்டமுடன்-மதுவுண்டுகெக்கலிப்
பார்-பறைவாத்தியமும்வெகுநேர்த்தியுடன் இருக்கும்புலைப்பாடி-அ
தில்-ஈசன்திருவடிநேசமுடன், சாருப் ஒருபுலையர்-அவர்-சாதிமுறை
தவறாதவராம்-நந்தனாரவர்பெயராம்-வெகு நல்லவராமிந்தத் தொல்
லுலகில் - அவரேசிவனடியார் அவர்க்- கருமெதிரில்லைதாரணியில்
கோடிகோடிசென்மங்களோ-முன்னங்-குற்றமறச்செய்த நற்றவமே
அவதாரமானதுவோ ஈசன்-அன்புபுரியும் பேரின்பசுகம் கொள்ளை
கொள்ளவேபிறந்தார்- திருக்கோயில்வலஞ் சுழன்றுவலுடன்-செய்
யும்பணிவிடைகள்-ஈசன சிந்தைமகிழ்ந்துகுளிர்ந்திடவே-மததளபே
ரிகைக்கும்-இசை-வார்கொடுத்துப்புறந் தோல்கொடுத்து - மறவாம
லே தினமும்-நல்ல-வாசம்-பெருகுங்கோரோசனையும் - தேவாலயங்
கள்தோறும்-வந்துசித்தமுருகியேபத்திவெள்ளம்-புரண்டோடிக்கங்
குகரை-என்று-பேதமறிய வொண்ணாதுகண்டீர் - சாதியில்நீசனவர்
பேணிச்-சாருந்தொழின்முறையாரும்பகல்-திருப்புன்கூர்ச்சென்ற
ரனைக்கண்டு-சேவித்திசைபாடிபாவித்தபின்-தில்லைச்சிதம்பரத்தைக்
கண்டு-சேவிக்க வேண்டுமென றுவலுடன் நாளைப்போவேனென்று
ராம் தன்னை-நாடும்பறையர்களோடிவந்து அண்ணேநீபோகாதே-நம
க்காண்டைபொல்லாதவன்-வேண்டிக்கொள்ளான்-பார்ப்பாரசாதியு
ண்டே-என்னபாடுபடு முழக்காடுமங்கே-நமக்குந்திருநாளோ-அந்த-
ஞாயமுண்டோ வென்னமாயமிது வென்றேதடைசெய்தார்-சிவன்-
வேடிக்கை தானென்று நாடிக்கொண்டே-அறியாதுபோலிருந்தசெ
ம்பொன்-னம்பலத்தாடியைக்கும்பிடவே-ஆதனார்தனி லிருந்துவிடு
ம்-அம்புபோலப்பறந் தையமின்றித்-தில்லையருகில்வந்தார்-மனந்தே
றிக்கொண்டார்குறை யாறிக்கொண்டார்-கெண்டாமணிபோசைகா
தில்-கேட்குதெனறூரதைப்பார்க்கவென்றே-கொண்டாட்டமாகிவந்
தார்-கையைக் - குவிததுக்கொண்டேதனக் கம்பிட்டதோவென்றே
மனமகிழ்ந்தார்-தெரு-வீதியிலேவந்துகாதலுடன் கண்டார்களையா
றி- இரு-கண்களிலானந்தம் பொங்கிடவே-நின்றார்மதிற்புறத்தே-வெ
குநேர்த்தியென்றார்தைப்பார்த்த தில்லை-பணிந்தார் பாவசமாய்-நல்
ல-பாக்கியசாலிகளாகுமென்றார்- இதுதானோதில்லைப்பதி என்று-எக்
களித்தாராடிக் கெக்களித்தார் ஐயாவுன் சந்நிதியோ - நான் - ஆசை
கொண்டுவநதேநேசமுடன்-தெருவில் பொடித்தூளை-அள்ளித்தேக
முழுதினுந்தாகமுடன்-தரித்தார், திருநீறாய்-நாலு-சாஸ்திரவேதங்க

கள்பார்த்தணைரும்-பெரியோரிருக்குமிடம்-இந்தப் பேயனிருப்பது ஞாயமல்ல-நானேபறைச்சாதி-தில்லை-நாதன் தரிசன மாதரவாய்ப்ப ண்ணுப்படுபாவி-இந்தப்-பாரிலிருப்பது சீரலவே-என்றே குளத்தோரம்-புக்கிஏங்கிநின்றார் மிகஏங்கிநின்றார்-ஓயாப்பெருங்கவலை-கொண்டு உள்ளங்குழைந்திட தெள்ளுமணக் கண்ணீர்சரைபுரள இருகை தொழுவாரவர் பெய்தொழுவார் கீழேபுரண்டழுவார்-ஒன்றும்-கேள்விமுறையில்லையோநாதா வென்றேதலைகுனிந்தார் - எந்தன்-வேதனையைக்கண்டு ஆதரிக்குந்தெய்வங்கிடையாதோ - பாவி-சித்தந்தெளியவிரக்கிதந்து-வாவென்றழைப்பாரோ-விண்ணில் வானவர்போற்றுமூனமிலாகனகசபைநடனம் - கண்ணிற்காட்டக்களித்திடநாயடியேன் - வருந்தித்திப்பேனே எந்தன் - வாணுளே ழிவது வீணேவே-அடடாயிதென்னவென்று-சொல்லி-அந்நகர்வீதியைச் சுற்றிவந்தார்-இரவும்பகலோயாரதை ஈசன்கண்டுவிசுவாசமுடன் பாலகிருஷ்ணன்பணியும் திருப்பாதமுள்ள தில்லைநாயகனே-கனவிலுருவாகிவந்துகாக்ஷிகொடுத்துக்கடாக்ஷித்தபின் எரியினிடைமூழ்கி-வெகு இன்பம்பெருகிய அன்பர்துதி-வேதமுனிவடிவாய்த்-தில்லை-வேதியர்கண்டிருகைதொழுதார் அங்கம்புளகிதமாய்ச்செம்பொன்-னம்பலத்தாடிய சம்பிரமத்தைக் கண்டாரறிந்திலரால்.

---

இ-ம்-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

நீசனைப்பிறந்தாலும் போதும்-ஐயா
நீசனைப்பிறந்தாலும் போதும்

அநுபல்லவி.

ஆசையுடனம்பலவனடியிலிருந் தாலும் (நீச)

சரணங்கள்.

கோதிலாத்தவங்கள் புரிந்தாலும் தங்கள்
குலவண்மைதவறுதநெறியி லிருந்தாலும்
வேதமுடியாவுமுணர்ந் தாலும்-மாயை
விலகாதஒருநாளுந்துலையாது துன்பம்(நீசனைப்)

களவுகொலைசெய்துவந் தாலும்-பழி
காரருடனெந்நேரங்குடியிருந் தாலும்
வளமறவேவாழ்வுகெட் டாலும்-நல்ல
மனிதனவனிடமாகமறவினாலு காது (நீசனுய்)

எத்தகருமங்கள்செய் தாலும் எங்கு
மிடையாதசொடையாளிபெயவிருந் தாலும்
கோத்திரக்கீர்த்திமிகுந் தாலும்-எங்கள்
கோபாலகிருஷ்ணன்தொழும் பாதம்நினையாதோன். (நீச)

---

வசனம்.

அப்படியே பக்திசெய்தால்போதும் மற்றசாதி வருணாசிரமங்களினாலே ஒன்றும் பிரயோசனமில்லையென்றும், ஒருஇதிகாசத்தைச் சொல்லுகின்றார். பூர்வத்திலே தில்லைவெட்டியா னென்றும் பெற்றான், சாம்பனென்றும், ஆதனார்நந்தசாம்பனென்கிறதிருநாளைப்போவானென்றும் பெயர்பெற்ற இம்மூன்றுபேர்களுந் திருச்சிற்றம்பலத்தையடைந்தார்கள். இம்மூன்றுபேர்களில், நந்தசாம்ப னென்பவர் மாத்திரம் தில்லைமூவாயிரம்பேர்களும் பார்க்கச் சபாப்பிரவேசமானாரென்றுசொல்ல ரிஷிகளெல்லாரும் ஆனந்தமடைந்து உபமன்னியமகாரிஷியைப் பிரதக்ஷணஞ்செய்துப் பாடிவணங்கி அஞ்சலிசெய்து ஓய்சுவாமி,எல்லோரும்பார்த்திருக்கையில்முத்தியடைந்ததிருநாளைப்போவாரென்று பெயர் படைத்தும் பேறுபெற்ற சிவபக்தருடைய சரித்திரத்தைச்சொல்லுங்களென்று ரிஷிகள் பிரார்த்தித்துக் கேட்கும்போது, உபமன்னியமகாரிஷியானவர் மிகவுஞ் சந்தோஷமடைந்துஈஸ்வரனுடைய குணங்களை வருணிப்பதைப்பார்க்கிலும், ஈஸ்வரபக்தர்களுடைய குணங்களைச்சொல்லுகிறது மெத்தவும்புருஷார்த்தமென்றுசொல்லத்தொடங்கினார் சிதம்பரத்திற்குநாளைப்போவேனென்று சிலதுநாள் நந்தன்சொல்லிவந்தபடியால்,நந்தனுக்குநாளைப்போவாரென்றுநாமதேய முண்டாச்சுது ஆகிலும் ஈஸ்வரனுடைய குணங்களைச்சொன்னாலுஞ் சொல்லலாம் பக்தர்களுடைய குணங்களைச் சொல்லயாவர்க்குந்தெரியாது தெரிந்தமட்டுஞ் சொல்லுவோமென்று மயிர்சிலித்து ஆனந்தக் கண்ணீர்வடித்து மனங்களித்துப் பரமசிவனை நினைத்து வாயால்துதித்து ஆத்துமா ஆத்துமிகளாயிருக்கின்ற தாபத்திரயங்களினாலே துன்பப்பட்டிருக்கின்ற செந்துக்களுக்கு அமிர்தவருஷம் வருஷித்தல்போல நந்தனாருடைய புண்ணியகதாமிர்தத்தை வருஷிக்கத் தொடங்கினார்.

இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தன் சரித்திரமானந்தம்-ஆறாறுமத்தி
யந்தம்பக்திரசகெந்தஞ் சொல்லச்சொல்ல. (நந்தன்)

அநுபல்லவி.

நந்தன் சரித்திரம்வெகு அந்தஞ்-சிவனாருக்குச்
சொந்தந்துலையும்பவ பந்தங்-கெட்டபேர்க்கு (நந்தன்)

சரணங்கள்.

ஏது இவனைப்போலேசாது-பூமியிலிருக்
காது அரிது இருகாது-படைத்தபேர்க்கு (நந்தன்)

வாடிமனதிளகிப் பாடி-அரகராவென்
றாடிகனகசபை நாடிச்-சேருவேனென்ற (நந்தன்)

அண்டர்கொண்டாடுஞ் சோழ-மண்டலநாதனைச்சூழ
கொண்டமேற்காநாட்டில் விண்ட-ஆதனூரில்வாழ் (நந்தன்)

இராகம் கமாசு-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவான்-சரித்திரம்
தேனிலும்பாலினுமினியதுகண்டீர். (திருநா)

அநுபல்லவி.

சித்தமுருகியசிவ யோகிகளுக்
கர்த்தமிதுவென்றநுதினம்பணியும் (திருநா)

சரணங்கள்.

மேதினிபுகழுமாதனூர்விளங்க-வந்த
மாதவஞ்சாதனைபெருகிய
பேதமிலாதவன்வேதகுருபர
நாதனைபணியும். (திருநா)

மனதில்குற்றமில்லாதவன்-நிந்தை
வஞ்சனைமாயை சொல்லாதவன்
கனவிலும்நினைவிலும் சிவபதங்குருபதங்
கருத்துறைகளிடப் பெருத்திடவாசனும் (திருநா)

சாதிமுறைமைதவ ருதவன்-பவ
சாகரத்திடை முழுசாதவன்
பூதமாயாதிக ளாகியவுலகம்
பொய்யிதுமெய்யிது வல்லவென்றறிந்திடும். (திருநா)

---

## பெரியபுராணச் செய்யுள்.

### கொச்சகக்கலிப்பா.

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம் பதியாகுந்
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன்-செழுமணிக டிரைகரைத்தான்
முகந்துதர விருமருங்கு முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்காநாட் டாதனூர்.

### வசனம்.

கொள்ளிடத்துக்குச்சமீபமாகிய உலகமெல்லாம் புகழும்படிக் குக்கீர்த்திபெற்றிருக்கின்ற அமராபதி, அளகாபுரிபட்டணத்தைத் தோற்கச்செய்யும் மாடமாளிகை கூடகோபுரத்தோடும் அணிமாதி சித்திகள் நிறைந்துதிரண்டும் செல்வத்தோடும் வேதவேதாந்த தத்துவ ஞானமறிந்து சாட்சாத்காரம்பெற்ற வேதியரோ மற்றமூன்று வருணாசிரமங்களாலேசூழப்பட்டு பூலோகத்தி லதிகமென்று சொல்லப்பட்ட ஆதனூரென்னும்கிராமத்துக்கு வெளியில் நஞ்சைநிலங்களிலேசூழப்பட்டிருக்கின்றகடைசாதியார் குடியிருக்குஞ் சேரியைக்கொண்டாடிச் சொல்லுவார். ஏனென்றால், ஸ்காந்தபுராணத்தில் அஞ்சுபோககண்டத்திலேசிவபக்தன் குடியிருக்குஞ் சேரியைக் கைலாசமென்று வருணித்துச்சொன்னபடியால், உபமன்னியபகவான் மிகவுங்கொண்டாடிச் சொல்லுகிறார்.

---

### சிந்து.

பழனமருங்கணையும் - புலைப்பாடியது கூரைவீடுதனில், சுரையோபடர்ந்திருக்கும்-அதைச்சுற்றிழும்காய்கள்குலைத்திருக்கும்பருந்தோடிவட்டமிடும்-இளம்பச்சைப்பிசிதமே லிச்சைகொண்டுகோழிகூவுங் கூக்குரலும்-பாழுங்-கொல்லையருகினில் வெள்ளெலும்பும்,நரம்புங்குவித்திருக்கும்-பல-நெட்டிமிதந்திடும்குட்டைகளில்நண்டோகுடியிருக்கும்-சிறுகத்தைகமடம் வலுத்திருக்கும்தோலுருங்கேணிகள்வெகு தொல்லைப்படும்வாடை; சொல்லறியாப், பரம்போ அடித்தி

ருக்கும் வயற்பக்கங்களில்மெத்தநொக்கெலும்பும், கிழித்தோல் நரம்புகளும் அவர்க்கீனமில்லைசிறுமீனுலரும்,தெருவில்விளையாடிக்கொண்டு அவர்தெந்தினம்பாடுவர் சுந்தரமாய், இருப்பைமணிவரையில் கட்டி இண்டந்தலைகளில் பூண்டிருக்கும், சங்குதோடுகோதணியும் அருந்தாவடமேயவர் தூவிடமாய்,மணியோதரித்திருப்பார் தெருவாசற் புறந்தனிலேசிக்கொண்டு, கொண்டாட்டமாயிருப்பார் கையைக் கொட்டிக்கொண்டுதனக் கஷ்டமுடன், மதுவுண்டு கெக்கலிப்பார் பறை வாத்தியமும்வெகு நேத்தியுடன், இருக்கும்புலைபாடி அதின் ஈசன்திருவடி நேசமுடன் தரிக்கும்ஒருபுலையர் அவர்சாதிமுறைமை தவறுதவராம் நந்தனுரவர்பெயராம்.

வசனம்.

இவ்விதமாய்க் கடையரிருப்பின் வரப்பினில்வாழ்வார் இப்பரிவுடன் சிவன்கழற்கேவிளைத்த வுணர்வோடுமந்தராபத்திலூர்புலமையாண்டதொழிலனுயத்திலொப்பிய நந்தனுரென்றொருவருண்டாயிருக்கும் புலைப்பாடியில்பரமசிவன் பாதாரவிந்தத்தில் மிகுந்த அந்தரங்கம் பொருந்தினவராகிய நந்தனார்மிகுந்தபக்திபுரிந்திருந்தார்வீச்சுடன்சேற்றில் விழுந்தாலும் பிள்ளைப்பூச்சிமேலொட்டாது அத்தன்மைபோல், எத்தனை காரியமிருக்கினும் முத்திபளிக்குங்கர்த்தனுகிய அத்தனை மனது சுத்தமாகிய சித்தத்தில் நித்தமும்வைத்து உத்தமபதிபெற்றிருந்தார் மற்றதுமறந்தார் இப்படியெல்லாமிருந்தும் நல்லகுணமில்லாமற்போனுல் உலகம்பொல்லாங்குசொல்லுமல்லவா

சிந்து.

இவர்வெகு நல்லவராமிந்தத் தொல்லுலகில் அவரேசிவனடியார்.

வசனம்.

என்று ஆச்சரியங்கொண்டு சொன்னபடியினுலே இவரைப்போலபக்திமார்க்கத்தில்மிகுந்தவராயிருந்தவர் ஆரிருக்கிறூர்ஆரிருப்பார் என்று இணைசொல்லப்போகா வணைகடந்த பரமசிவ பத்திமானென்றுசொல்லப்படும்.

சிந்து.

அவர்க் - காருமெதிரில்லைதாரணியில் கோடிகோடி ஜன்மங்களோமுன்னம்-குற்றமதைச்செய்த நற்றவமே அவதாரமானதுவோ ஈசன்-அன்புபுரியும் பேரின்பசுகம் கொள்ளைகொள்ளவோ பிறந்தார் திருக்கோயில் வலஞ்சுழன் றுவலுடன் செய்யும்பணிவிடைகள்.

பெரியபுராணச்செய்யுள்.

வரில்விசிம்பறைத்துடவை யுண்வரிமையாக்கொண்டு
சார்வில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினால்
கூரியவலையமுக்குமுப் படையண்ணல் கோயிறொறும்
பேரிகையே முதலாய முக்கருவி பிறவினுக்கு.

இதுவுமது.

போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் பகலுமிசை
சேர்வைத்த வீணைக்கும் யாழுக்கு நிலைவகையாற்
சேர்வுற்ற தந்திரியுந் தேவர்பிரா னர்ச்சனைக்கட்
கார்வத்தி னுடன்கோரோ சனையுமிவை யளித்துள்ளார்.

வசனம்.

இந்தப்பிரகாரம் நந்தனார்சிவஸ்தலங்கள்தோறும்போய்சுவாமியைத் தோத்திரஞ்செய்கிற தெப்படியென்றால்.

---

இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

செந்தாமலர்சூழோடைகளும்மேடையுஞ்
செறிந்தமாதர்க ளாட்டம்-சிறந்தவேளூர்
எந்தைபிரானுக்கபிஷேகக்கோரோசனைமற்
றீந்தொழிந்தார்மன வாட்டம்
சிவசரவண மூர்த்தி ஞானசம்பந்த ரெனத்
திருவவதார மாக-வந்தசீர்காழி
புவனரக்ஷகன்றிரு நிலைநாயகியையேத்தி
பூரித்தார்வெகு வாக
ஒருபொற்புரமுமதி ளோங்கியமாயூரத்
துவந்தவில்வநா தீசரை-மிகத்தொழுது
ஒருமுகக்கருவிக்குந்தோல்நரம்பிவைதந்தா
ருருகிப்புகழவுநதன் பெயரை
உமையொருபாகத்தி னுயர்ந்தபரன்றிரும
ணொருபசுவுங் கன் றுக-மாயமேவடஞ்
சமைத்துப்பின்னுநீதிச் சோழன்றனக்குக்காட்டித்
தந்தவாரூர்ச்சென்றாரன் ப..

---

வசனம்:

பின்னும்நந்தனார் தாம்செய்யுந் தருமமேதென்றால் இவர்புலைய ராவபடியால் சிவஸ்தலங்களுக்குப்போய்வீதியைச்சுற்றி சந்நிதியில் வந்துதடிவிழுந்ததுபோல உடல்பணியப்பணிந்து புழுதியில்புரண் டுமயிர்சிலிர்ப்பக்கண்ணீருதிர்ப்பவாய்குளறி உரைதடுமாறிஒருதரம ழுதுஒருதரந்தொழுது எக்கலித்துகெக்கலித்துஒருதரம்வெறுத்து சகமறந்து அகமிழந்து அனல்கண்டமெழுகதுபோலுள்ளமுருகிஆந ந்தவெள்ளம்பெருகி கள்ளங்கருகிச்சிவனேசிவனேஎன்றுவாய்வலிக் கப்பசிகைவலிக்கக்கொட்டி கால்வலிக்கக்கூத்தாடி நிற்பவரொருமு கூர்த்தஞ்சித்திரத்திலெழுதும்பதுமைபோலகண்ணிமையாமல்வாய சையாமல் ஓசைதெரியாமல் அலையடித்தோய்ந்தகடல்போலநிறைந் துதன்னைமறந்திருப்பார் தன்னினைவுவந்தது பரவசந்தெளிந்துஈசனை ப்பணிந்துகொண்டுவந்த பணிவிடைசெலுத்தக் கோயிலார்கேட்கக் கும்பிடுபோட்டுச் சொல்லுவார்.

இ-ம், ஆனந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

வாரிருக்குதுதோலிருக்குது வாங்கிக்கொள்வீரே-மத்தளங்கள்
பேரிகைக்கும்வீணைக்கும்நல்ல விறுக்கிக்கட்டும்விசை (வாரிருக்)

பேரிருக்குதுபோதுஞ்சிவ பெருமையைகொண்டாடிதினமுஞ்
சீருறைகின்றதில்லைப்பதியில் சேருதற்குபாயந்தேட (வாரிருக்)

சிறியவனைசாதியொன்று மறியாதவனேனை-சிவ
பெருமானுக்கடியேன் செய்யும்பணிவிடையிது (வாரிருக்)

சிந்து.

செய்யும்பணிவிடைகள்-ஈசன்-சிந்தைமகிழ்ந்து குளிர்ந்திடவே மத்தளபேரிகைக்கும்-இசை-வார்கொடுத்துப்புறந்தோல்கொடுத்து, மறவாமலேதினமும்-நல்லவாசம்பெருகுங்கோரோசனையும், தேவால யங்கள்தோறும்வந்து-சித்தமுருகியபத்திவெள்ளம் புரண்டோடிக்க ரைகாணென்று-பேதமறியவொண்ணாதுகண்டீர்,சாதியில்நீசனவர்.

வசனம்

இப்படிபத்திசெய்யாநின்ற நந்தனாருடைய வரலாறேதென்றால்.

இ-ம்- துக்கடா-ஆதிதாளம்.

ஆதனூரிலொருவேதியர்க்குள்ளே அடிமைக்காரப்பறையன்
ஒருவாதுமொன்றுந்தெரியாதவன்பரி சுத்தமானபத்தன்
கோதிலாத்தங்கள்சாதியார்க்குச்சிவ குணங்களைமிகச்சொல்லி
காதலோடுதிருப்புன்கூரீசனைக்கண்டுவருவோமென்றார்.

வசனம்.

நந்தனார் சிவதெரிசனஞ்செய்யவேண்டியதற்காகத் தங்கள் சாதியாரைக் கூப்பிடுகின்றார்.

இராகம் செஞ்சுருட்டி ரூபகதாளம்.

பல்லவி.

சிவலோகந்தனைக்கண்டு-சேவித்திடுவோம் வாரீர்

அநுபல்லவி.

பாவமயங்களைப்போக்கி-அவர்
பரமபதத்தைக்கொடுப்பாரந்தச் (சிவலோக)

சரணங்கள்.

அற்பசுகத்தைநினைத்தோம் அரன்றிருவடிமறந்தோம்
கற்பிதமானபிரபஞ்சமீது கானல்சலம்போலேயெண்ணி (சிவ)

ஆசைக்கடலில்விழுந்தோமினி யறிவுக்கறிவையிழந்தோம்
பாசமகலவழிதேடாமல் பரதவிக்கும்பாவியானோம் (சிவ)

மானிடசன்மங்கொடுத்தார்தன்னை வருத்தக்கரங்களளித்தார்
தேனும்பாலும்போலேசென்று தேரடியில்நின்றுகொண்டு (சிவ)

பெரியபுராணச்செய்யுள்.

கொச்சகக்கலிப்பா.

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகண்மிக நினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினா லொருப்பட்டங் காதனார் தனினின்றும்
வருதகமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார்.

வசனம்

நந்தனாரிப்படிச் சிவலோகநாதனைச் சேவிப்போமென்று நெடுநாளாய்ச்சொல்லி நிச்சயஞ்செய்த நந்தனாருக்கும் பறையர்களுக்குமுண்டான வாக்குவாதம்.

(அவர்கள்)தவஞ்செய்யுஞ் சடங்கிதுவல்லவோ பறையர்கள்செய்தால் பாவமேயென்றார்.

(நந்தன்)தேருந்திருநாளுமிருக்குது போவோம்வாரும்வாருமென்று வருந்தியுமழைத்தார்.

(அவர்கள்)பொறும்பொறுமிதுபுண்யமல்ல ஏரிக்குப்போவோமென்றிவரையுமழைத்தார் சேரியைநீக்கிச்சிறிதுபோர்வந்தார்.

நந்தன்)பதினொருபேர்கள் பண்புடன்வந்தார் மாரிபோல் ஞானமார்க்கம்பொழிந்து,தவமுனிபோலேதானங்கேநின்றார்.

(அவர்கள்)சிவலோகநாதனைச் சேவிப்போமென்றார்.

(நந்தன்) வெறுங்கையோடேபோகலாகாதென்றுவாருடன்தோலும் வரிசையாய்க்கொண்டார்.

(அவர்கள்)சேரியிலுள்ள சிறிதுவென்றார்.

(நந்தன்)வந்தபுலையருக்குப்பத்திப்பெருகவே நெற்றியில்நீசிட்டார்.

(அவர்கள்)சத்தியந்தானென்று மெத்தவுங்கும்பிட்டார்.

இ-ம்-வராளி-சாப்புதாளம்.

இவர்—சிங்காரமானபள்ளுபாடினார்
அவர்—அங்கங்குளிர்ந்துகொண்டாடினார்
இவர்—கோரோசனைப்பையையெடுத்தார்
அவர்—தாராளமாய்வரிசைகொடுத்தார்
இவர்—சிவமந்திரஞ்சொல்லிச்சேவித்தார்
அவர்—தவமிக்தேயென்றுச்சரித்தார்
இவர்—ஆசைப்பெருங்கடல்தாண்டினார்
அவர்—ஓசைபடாமலேவேண்டினார்
இவர்—அளவில்லாதானந்தமடைந்தார்
அவர்—அளவில்லாக்காட்சிபெற்றிருந்தார்
இவர்—திருப்புன்கூரீசனைப்பாடினார்
அவர்—விருப்பமோடிவரைக்கொண்டாடினார்

வசனம்.

இப்படிஎல்லோருங்கூடிச்சிவனை அடிக்கடிவணங்கி அரகராவென்றுரைத்திடுஞ்சத்தம்பரமசிவனேயறிவார்,இப்படிநந்தனர்பதினொருபேர் பறையரோடு திருப்புன்கூர்வந்து சேர்ந்தார்.

சவாயி.

கலம்வந்துவிதி யலம்வந்துகண்கள்
சலம்வந்துசோரும்,பலம்வந்துதெங்கள்
குலஞ்சுத்தமாச்சு ம்லம்வந்துபோச்சு
நலங்கண்டோமென்று நிலங்கொண்டுநின்றார்.

அந்தஸ்தலத்திலே நந்திமிகவும்பெரிதானபடியினாலே சிவலிங்கதரிசனஞ்செய்வதற்கு நந்தி மறைத்திருப்பதால், நந்தனர் துயரமடைந்துசொல்லுகின்றார்.

இராகம்-சங்கராபரணம்-ஏகதாளம்.

கண்ணிகள்

அரகரதிரிபுராந்தகஜீவாதரவெங்கள்
அம்பிகையொரு பாகா-எங்கும்
நிரந்தரமானவெள்ளுவெண்ணெய்போலவிருந்து
நினைப்பவர்க்கருள் போகா
வெள்விடைமேல்வரும்விமலநமசிவாய
விளங்கும்வேத முடிவே-நால்வருக்குத்
தெள்ளுறச்சிவஞானபோதமளிக்கவந்த
சிறந்தமெய்தவ வடிவே
மானுமழுவுந்தருமகவாகுவலயமும்
மருவுஞ்சூல பாணி-எளி
யேனுங்காணதரிசனைதரவுமையுட
னெழுந்தருள்விரிஞ்சு தோணி
மன்னுஞ்சந்நிதிமுனம்மருவுமிடபதேவர்
மறைந்திருக்கநினைக் காணேனே-முன்னம்
என்னவினைசெய்தேனோ கண்பெற்றபாவந்தானோ
இதயத்தில்மகிழ்ச்சி பூணேனே

---

சவாபி.

சிவலோகநாதன் திருச்சந்நிதானம்
மலையாகியநந்தி மறைந்திடுதிங்கே
பலகாலஞ்செய்த பாழ்வினைகுவிந்து
மலையாகிப்படி மறைந்ததோவென்றார்

வசனம்.

என்றுசொல்லிய நந்தனார் பின்னுஞ் சொல்லுகின்றார்

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வழிமறைத் திருக்குதே மலைபோலே-ஒரு
மாடுபடுத் திருக்குதே (வழி)

பாவிப்பறையனிந்த வூரில்வந்து மிவன்
பாவந்தீரேனோ உன்றன்
பாதத்தில்சேரேனோ யேறேனோ
சிவலோகநாதாமாடு (வழி)

தேரடியில்நின்றுதெரிசித்தாலும்போதும்
கோயில்வரமாட்டேனே ஐயே
ஓரடிவிலகினால்போதுமங்கேநின்று
உற்றுப்பார்க்கச்சற்றேவிலகாதோமாடு (வழி)

வசனம்.

இப்படிநந்தனார்தரிசனங்காண ஓயாமல்மனம்வருந்தும்போது சுவாமிநந்தனார் மீதிரங்கிநந்தியை விலகச்சொன்னார்.

## பெரியபுராணச்செய்யுள்.

கொச்சகக்கலிப்பா.

சீரேறுமிசைபாடித் திருத்தொண்டர் திருவாயி
னேரேகும்பிடவேண்டு மெனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறு மெயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
பேரேற்றை விலங்கவருட் புரிந்தருளிப் புலப்படுத்தார்

இராகம்-தூக்கடா-ரூபகதாளம்.

ஒருநாளும்வாராதபத்தன்-திருநாளைபோவாரென்னும்சித்தன்
உலகெங்கும்பிரசித்தங்கண்டு ஒதுங்காமலிருந்ததுகுற்றம்

---

இராகம்-அங்குசதோணி-ரூபகதாளம்.

பல்லவி.

சற்றேவிலகியிரும்பிள்ளாய் சன்னிதானமறைக்குதாம்-நீ (சற்)

அநுபல்லவி.

நற்றவம்புரியுநம்மிட திருநாளைப்போவார்வந்திருக்கிறார் (சற்)

சரணங்கள்.

சாதிமுறைமைபேசுறான்-தன்னையிகழ்ந்தமேசுறான்
கோதிலாதகுணமுடையோன்கோபங்கொண்டால்தாளமாட்டோம்

வேதகுலத்தைப்போற்றுறான்-விரும்பிவிரும்பியேற்றுறான்
பூதலத்திலிவனைப்போலே புண்ணியபுருஷனொருவனில்லை (சற்)

பத்தியில்கரைகண்டவன்-பார்த்துப்பார்த்துவுண்டவன்
சித்தங்களையில்நமதுசெல்வம் முற்றுங்குறையுந்தயவுசெய்து (சற்)

---

வசனம்.

இப்படி சுவாமிசொல்ல நந்திவிலகினார்

நந்திநூரவிலகிநின்றார்-தன்சாமிமனதைக்கண்டார்- இவன்
நல்லபக்தனென்றார்-அடங்காதவெட்கங்கொண்டார்

இராகம்-சாவேரி-ரூபகதாளம்

பல்லவி.

மற்றதெல்லாம் பொறுப்பேன்
முத்திநூலும் கொடுப்பேன். (மற்ற)

பத்தனுக்குக்குற்றஞ்செய்தா
லதைப்பொறுக்கமாட்டேன். (மற்ற)

திடுக்கென்றவரை நுடுக்கபேசி
அடிக்கப்பொருக்கமாட்டேன். (மற்ற)

பசிக்குதென்றுவருகையிலொருவன்
புசிக்கப்பொருக்கமாட்டேன். (மற்ற)

வ ச ன ம்.

இப்படிசுவாமி சொல்லும்போது நந்திமனதாகலங்கிநூரவிலகி நின்றார்.

நந்தன்சிந்தைகுளிர்ந்து அளவில்லாதஆனந்தமடைந்துகுதித் தார் கெக்கலித்தார் கொண்டானடித்தார் துதித்தார் திருவடியுள் ளேபதித்தார் எங்குஞ்சிவமாகபாவித்தார்.

கடுக்கா.

குதித்தார்எக்கலித்தார் உள்ளங்களித்தார்
பள்ளுபடித்தார்-கண்ணீர்வடித்தார்-பற்களைகடித்தார்
ஒருதரந்துடித்தார்-இருதரம்நடித்தார்
இப்படிதரிசனஞ்செய்தார்நந்தனர் தரிசனஞ்செய்தாரே!

துக்கடா-ஆதிதாளம்.

சட்டமாக சந்நிதானங்கண்டுதுடை தட்டினர்கைகொட்டினர்
அஷ்டமூர்த்திபொருவர்க்குமென்று கூத்தாடினர்பண்பாடின[ர்]
கஷ்டமானசமுசாரம் தாண்டினர்-மெய்-வேண்டினர்
இஷ்டதெய்வசிவலோகநாதனை எண்ணினருள்ள-நண்ணினர்
மட்டில்லாதசந்தோஷங்கொண்டு தான்பட்டபாடுகளைப் பேசினர் -
ஜென்மங்கெட்டதென்றுதன்னை யேசினர்
இட்டமானதன்சனங்களோடவர்-கட்டிமுத்தமிட்டுலாவினர்சிங்கக்
குட்டிபோலே தாவினர்

இராகம்-கலியாணி, அடதாளம்.

பல்லவி.

தெரிசனஞ்செய்தாரே-நந்தனார் தெரிசனஞ்செய்தாரே.

அநுபல்லவி.

தெரிசனஞ்செய்தார் தேன்மழைசொரிந்து
வரிசையுடன் அவர் வாழிவாழியென்று

சரணங்கள்.

குதித்துக்குதித்துக்கையைக் கும்பிடுபோட்டுத்
துதித்துத்துதித்துத்தன் துன்பங்கள்தீர (தெரிசனஞ்)

போற்றிபோற்றியென்று பொன்னடிவணங்கிப்
பார்த்துப்பார்த்துப்பர மானந்தங்கொண்டு (தெரிசனஞ்)

அச்சமறந்தவ ரறிவிலுணர்ந்து
இச்சைமறந்தவரேகாந்தமாய்நின்று (தெரிசனஞ்)

வசனம்.

தெரிசனம்பண்ணியபின்பு கொண்டுவந்தபணிவிடைசெலுத்தி அவ்வீதியில்மட்டையூருங்குட்டையைக்குளமாய்வெட்டவேணுமென்றுவிசாரமுற்றார் சுவாமிஇதையறிந்துநாளைப்போவாராலேகுளம்வெட்ட காளப்போகாதென்று தன்பிள்ளையைஆளாகப்போகச்சொன்னார்.

துக்கடா

மாளாப்பிறவிபோக்கும் பிள்ளையார்வந்தார்.

நாளைப்போவார்-நீயாரப்பா வென்றார்
பிள்ளையார்-நானுன்னாளப்பாவந்தே னென்றார்
நாளைப்போவார்-குட்டையைக்குளமாய்வெட்டுவே னென்றார்
பிள்ளையார்-வெட்டினால்மிகுபுண்ணிய மென்றார்
நாளைப்போவார்-அதெட்டுமெட்டு மென்றார்
பிள்ளையார்-குளம்வெட்டும்வெட்டு மென்றார்
நாளைப்போவார்-அற்பமாய்ப்பதக்குநெல்லைக் கொடுத்தார்
பிள்ளையார்-அப்பனேயிதுபோதுமென் றுரைத்தார்
நாளைப்போவார்-களித்துநிருவிகற்பமா யிருந்தார்
பிள்ளையார்-குளத்தைவெட்டுதற் கிசைந்தார்

இராகம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

தடாகமொன்றுண்டாக்கினர்-கணநாயகர்
தடாகமொன்றுண்டாக்கினர்

அநுபல்லவி

சடாமகுடதரன் சாம்பவியுடன் வர
சகலமுனிவர்மனத் தாமரையு மலர
கடாட்சமாகக்குகன் கணபதியுடன் மன்ன
காதலாயெவருந்துன்ன போதயனுசித மென்ன (தடாக)

சரணங்கள்.

கந்தமுலாவியதாமரைபூத்து கதிக்க-மிகுத்திடுஞ்சேர்
கண்டவராலுளுவைக்கணமங்கு குதிக்க
சுந்தரமிகுந்தபறவைகள் முழுகிலுஞ் சூழ
சோமசூரியர்கள்சுகமுடன்வந்து தாழ
விந்தையுடனேபலவேள்வியந்தணர் செய்ய
விளங்குஞ்சங்கினமுய்ய களங்கமில்லாமற்றுய்ய (தடாக)

ஓதிடுவானதியானதுதான்மிக நாண-ஆம்பல்மலர்ந்து
ஓதிமமுங்குருகின்குலமுமெதிர் காண
சோதிமருவுந்தேவ தாருநிழலுங் கொடுக்க
சுரபிக்கடம்பைமானும் சூழ்ந்து அங்கே அடிக்க
பாதமலர்க்குழலார் மகிழ்ந்து அங்கே நீராட
வல்வினைகளுமவிட்டோட வல்லவர்களுங்கொண்டாட (த)

வாசனைதங்கிய மல்லிகைமுல்லையின் சாலை-சந்தனச்சாலை
வாழைபலாக்கமுகுங் கனமாமலர்ச் சோலை
ஆசையாகமயிலழகுறவே நடிக்க
அருமறைப்பூசுரர்களனுதினமும் படிக்க
தேசுலாவுந்திவ்யத் தீர்த்தமாகுமென் றெந்த
திசைதேவர்களுமுந்த இசைநந்தனர்தஞ்சொந்தத் (தடா)

---

நாளைப்போவார் நிஷ்டைகலைந்துபார்த்தார்
குளம்வெட்டியிருக்கவுளமகிழ்ந்தார்
பிள்ளையாரிருக்கக் கண்களிற்காணார்.

வசனம்.

இதெல்லாஞ் சிவன் செயலென்று சந்தோஷங்கொண்டு முன்போலவே கோயிலைவலம்வந்து தன்னுடன்வந்த பதினொருபேர்களுடன் ஆதனூர்வந்து சேர்ந்தார்.

பெரியபுராணச்செய்யுள்

கொச்சகக்கலிப்பா.

இத்தன்மையீசர்மகிழ் பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்திருத்தொண்டுசெய்து விரவுவார்மிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத் திருமன்றுட்சென்றிறைஞ்ச
வுய்த்தபெருங்காதலுணர் வொழியாதுவந்துதிப்ப.

சிந்து.

பேணிச்-சாருந்தொழின்முறையாரும்புகல்-திருப்புன்கூர்ச்சென்றானைக்-கண்டு சேவித்திசைபாடிபாவித்தபின் தில்லைச்சிதம்பரத்தைக்-கண்டு சேவிக்கவேண்டுமென்றுவலுடன் நாளைப்போவேனென்றாராம்.

வசனம்.

நந்தனார் திருப்புன்கூர்ச் சிவலோகநாதனைத் தரிசனம்செய்து ஆதனூர்வந்தநாள்முதல் ஊணுறக்கமுதலானதும்விட்டார், தில்லையம்பலம் திருச்சிற்றம்பலமென்று சொல்லத் தலைப்பட்டார் சேரியிலுள்ள பெரியோர்களைக்கூப்பிட்டார், வணங்கிக் கும்பிட்டுச் சொல்லுவார்.

இராகம்-பியாகு-ஆகிதாளம்

பல்லவி.

சிதம்பரம்போவேநான்-நாளைச் - சிதம்பரம்போவேநான்

அநுபல்லவி.

சிதம்பரம்போவேன் தேறித்தெளிவேன்
பதங்களைப்பாடிப் பார்புகழ்தில்லைச் (சிதம்)

சரணங்கள்.

ஒருதரஞ்சொன்னலுலகங்களுய்யு
மிருவினைப்பய னில்லைஎந்நாளும் (சிதம்)

பாதிராத்திரியில் பன்மறையோதி
வேதியர்போற்றி விளங்கியதில்லைச் (சிதம்)

திறமொன்றறியாத் தீங்குகள்செய்யும்
பறையனாய்ப்பிறந்த பாவங்கள்துலையச் (சிதம்)

வசனம்.

நாளைப்போவார் தனக்குத்தெரிசினங் கிடைக்கவேண்டியதற்காகக் கற்பகப்பிள்ளையாரை வேண்டுதல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாலனுடல் பூமிபடச் சாய்த்திடுவான் செங்கமலக் காலைத்தூக்கிக்
கோலமுட னடனமிடுந் திருமன்றுள் நாயகனைச் சுற்றந்தீரப்
பாலிக்கும்படியெனக்கு வரமருள்புரிவாயென் றுநற்பழங்கள்வைத்து
மேலைக்கோபுரவாசல்கற்பகத்தைச் சிந்தையுள்ளே வேண்டுவாரே.

வசனம்

நந்தனர் சேரியிலுள்ள புலையர்களை அழைத்துக்கொண்டு சிதம்பரம்போய்த் தெரிசனம்பண்ணவேண்டுமென்று ஆசையுற்று பக்தி மார்க்கங்களைச் சொல்லலுற்றார்

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்.

நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
நாற்றநரம்புமின்னைஞ்சுமப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
நாறுமுடலைக்கண்டு களிப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
நாளை வீணாகக்கழிப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
நமனார்க்கஞ்சியோடி யொளிப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
ஞானத்தைப்பாராம லிருப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இந்த
நாட்டிலிகழுஞ்சென்மம்படைப் பேனோ-நான்
நாளைப்போகாம லிருப் பேனோ-இல்லை
நாதனைக்காணாமற் புசிப் பேனோ-நான் (நாளை)

ஆனந்தக்களிப்பு.

காணாமலிருக்கலாகாது பாழுங்
கட்டைகடைத்தேறவேண்டியிருந்தால் (காணமல்)

முத்தியளித்திடும் பாதம்-தில்லை
மூவாயிரம்பேர்கள் பூசிக்கும் பாதம்
சத்திக்கிணையான பாதம்-வேத
சாஸ்திரங்கள்நாலுந்தேடிய பாதம் (காணமல்)

காலனைச்சீறிய பாதம்-சன
காதிகளுக்குள்ளே செலுத்திய பாதம்
மாலயன்தேடிய பாதம்-எங்கள்
மாணிக்கவாசகர்பிடிகை பாதம் (காணுமல்)

ஆசையைப்போக்கிப் பாதம்-பர
மானந்தவெள்ளத்திலாகிய பாதம்
வாசம்பொருந்திய பாதம்-தில்லை
மாகாளிதாழவே தூக்கிய பாதம் (காணுமல்)

பாலகிருஷ்ணன்தொழும் பாதம்-காட்டில்
பாம்பும்புலியுங்கூத்தாடிய பாதம்
கோலச்சிலம்பணி பாதம-தில்லை
கோலச்சிலம்பணி பாதம் (காணுமல்)

வசனம்.

நந்தனர் சிவனைக்காணுமல் காலம் வீணுகப்போக்கலாகாதென்று தன்னினத்தாரைக் கூப்பிடுவார்.

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

துக்கடா.

எல்லோரும் வாருங்கள்-சுக
மிருக்குது பாருங்கள்-நீங்கள் (எல்லோரும்)

நல்லோர்பணிந்திடுந்தில்லையம்பல
நாதன்பாதம் பணிந்துக்கொள்வோம் (எல்லோரும்)

கண்ணிகள்.

வாருங்கள்-பர-மானந்தமிருக்குது-பாருங்கள்

சடலமெடுத்தபின் னேதுமேகண்டிலீர்
விடமெடுத்துண்ட மேனியரைநோர்வர
வடம்பிடித்திட வாருங்கள் இல்லை
இடம்பிடித்துநா மெல்லோரும்வாழலாம் (வாருங்கள்)

சொல்லடா தில்லைச் சிற்றம்பலமென்று
மெல்லடாவாயை சந்நிதிமேலாவே
நில்லடாவிரத மாயப்பிறவியைக்
கொல்லடாசிவ லோகங்குடிபுக (வாருங்கள்)

தள்ளடாநம தில்லைவாழ்க்கையைத்
தள்ளடாநந்தனார் சொல்லுறுதியென்று
கொள்ளடா தில்லை யம்பலத்தாண்டவன்
பள்ளடாவென்று பாடிக்கூத்தாடியே. (வாருங்கள்)

வசனம்.

இப்படி வாருங்களென்றழைக்கப் புலையர்வாராமலிருக்க நந்தனார் நல்ல வார்த்தைசொல்லிப் பறையரை சிவநாமத்தைச்சொல்லச் சொன்னார்.

## இருசொல்லலங்கார வாக்குவாதம்.

நந்தனார். தில்லையம்பலமென்று சொல்லச்சொன்னார்
புலையர். கள்ளப்பேச்சென்று மெள்ளச்சொன்னார்
நந்தனார். சங்கராவென்று சொல்லச்சொன்னார்
புலையர். இங்கேவாவென்று நிற்கச்சொன்னார்
நந்தனார். சற்றேயாகிலுஞ் சிவனை த்தியானமபண்ணென்றார்
புலையர் நத்தையோடுபாலை பானம்பண்ணென்றார்
நந்தனார். திருச்சிற்றம்பலமென்று பிலக்கச்சொன்னார்
புலையர். வெறிச்சகம்பளமென்று பிளக்கச்சொன்னார்
நந்தனார். சேறியில்நல்ல காரியமீதென்றார்
புலையர். ஏரியில்நல்ல மாரியீதென்றார்
நந்தனார். விட்டநாள்நினையாம லெட்டுநாள்மறவாமல்
நிஷ்டைபண்ணுதஜென்மம் நஷ்டமென்றார்
புலையர். விட்டவிரைமுளையாமல் நட்டபயிர்பலியாமல்
கெட்டுதானல்கிராமம் நஷ்டமென்றார்
நந்தனார். உங்கள்புலைத்தன்மை போகுமென்றார்
புலையர். எங்களைக்கெடுத்தாயே பாவியென்றார்
நந்தனார். தேவாதிதேவனைத் தெரிசிப்பீரென்றார்
புலையர் பாவாடைராயனைப் பாவிப்பீரென்றார்
நந்தனார். அனந்தாளுமீசனுக் கன்புசெய்யென்பார்
புலையர். இனத்தாரை நொந்தவர்க் கின்பமேதென்பார்
நந்தனார். நிதமுஞ்சிவனைப்போற்றிக் களிப்போமென்றார்
புலையர். பதரைத்தூற்றிநெல்லை யளப்போமென்றார்
நந்தனார் பெண்ணாசை பொன்னாசை விடுதலேநன்றாம்
புலையர். என்னாளுமுன்னாலே கெடுதலையுண்டாம்

நந்தனர் அப்பமோடு இஷ்டமுடனிருப்பேன் தடையேது
புலையர். கப்பமேலறிப்பட்டகடன் கொட்டைநூற்றிலுந்தீராது
நந்தனர். பூசத்திருநாளிற் போய்வருவோமென்றார்
புலையர். பேசத்தெரியாது பேயாநீபோவென்றார்
நந்தனர். அழுதழுறையிட்டா லம்பலத்தேகேட்குமென்றார்
புலையர். உழுதுபயிரிட்டா லுள்ளபடிவிளையுமென்றார்
நந்தனர். சித்தமெல்லாமம்பலத்தே சென்றதென்றார்
புலையர். பத்தியெல்லாம்வேறு பட்டுப்போச்சுதென்றார்
நந்தனர். குத்தாலத்தீசனைக் கூறுவீரென்றார்
புலையர். கைத்தாளம்போட்டுக் கதறுவீரென்றார்
நந்தனர் தாண்டவத்தெய்வமே தருந்தெய்வமென்றார்
புலையர். தூண்டிவீரப்பனே தொழுந்தெய்வமென்றார்
நந்தனர். இஷ்டப்படிநடக்கு மீசனைத்துதியென்றார்
புலையர். கஷ்டப்படமாட்டோம் கசக்காதேபோவென்றார்
நந்தனர். கொண்டாடிதெய்வத்தைக் கொள்ளுவீரென்றார்
புலையர். குலத்தைக்கெடுக்கவந்த கோடாலிக்காம்பென்றார்
நந்தனர். பலவழக்கம்நானறியேன் பறையரேயென்றார்
புலையர். குலவழக்கமறியாத குருடாபோவென்றார்
நந்தனர். நாக்கறுப்பேன்சிவனை நவிலுவீரென்றார்
புலையர். மூக்கறுப்பான்கதையை மொழிந்தீரேயென்றார்.

வசனம்.

நந்தனர், பெரியோருடைய அனுஷடானத்தைப் புலையர்களுக்குச் சொல்லுகின்றார்.

வேறு

நந்தனர். சிவனேதெய்வம் சிதம்பரமேகயிலாசம்
தவமேபெருமை தன்சம்பிரமதாயம்
புலையர். சேரியேசொர்க்கம் ஏரியேகயிலாசம்
மாரியேதெய்வம் மதசம்பிரதாயம்
நந்தனர் படிப்பதுஞானம் பார்ப்பதுமூலம்
குடிப்பதுமதிப்பால் குலசம்பிரதாயம்
புலையர். பிடிப்பதுநண்டு புசிப்பது இறைச்சி
குடிப்பதுகள்ளு குலசம்பிரதாயம்

நந்தனார். பாழைக்கடப்பார் பரவெளிதாண்டி
கோழைபறுப்பார் குலசம்பிரதாயம்

புலையர். ஆழக்திற்குளிப்போம் அருங்கொடைவந்தால்
கூழைக்குடிப்போம் குலசம்பிரதாயம்

நந்தனார். ஆசையைப்போக்கி ஐம்புலனைச்சுட்டு
மாசற்றவாழ்வு மதசம்பிரதாயம்

புலையர். பூசைகள்புரிவோம் பொன்னேருழுவோம்
கூசாமல்வாழ்வோம் குலசம்பிரதாயம்

நந்தனார். மைபத்திலாடி மனக்கயிறுபூட்டி
வையத்திலிருப்பார் மதசம்பிரதாயம்

புலையர். கையிலேகலேயம் காலிலேசேறு
பையிலேபாக்கு பறைசம்பிரதாயம்

வசனம்.

சிவபத்திபண்ணினல் அணிமாதிசித்திகள் அடையலாமென்று நந்தனார் சொல்லுவார்.

இராகம்—நீலாம்புரி-சம்பை-தாளம்

அஷ்டமாசித்திகளைப் பெறலாம்தில்லையி
லானந்தத்தாண்டவன் கோயிலைக்கண்டு
இஷ்டமுடன்வீதிவலம்வந்தீசன்
இணையடிதொழுதார்க்கு இனிப்பிறப்பில்லை
வாருங்கள்வாருங்கள் சொன்னேன் நீங்கள்
வாயாடாதோடி வருவீரென்முன்னே
கருகுமணிபிச்சோலை போதும்-உந்தன்
கள்ளவேஷமெங்களுக் குள்ளேகிடையாது
பருகுவதுகூழ்க்கஞ்சிபோம்-வாய்
பதறிவார்த்தைகள்பேசிப் பசப்பாதேபோடா

வசனம்

நந்தனரைப் பறையர்கள் நீசொன்னபடிகேட்பதில்லை எங்கள் நிச்சயமறியாமல் நீமயக்காதேயென்று பின்னுஞ் சொல்லுகிறார்கள்.

ஏசல்.

புலையர். பாப்பாரதெய்வமது பலிக்காதுபறையரைக்
காப்பாற்றமாட்டாது கைவிடுவீரென்றார்

நந்தனார். பாப்பார்பறையரென்று பாராதுபரிதிபோல்
காப்பாற்றுமல்லவோ கடவுதலேயென்றார்

புலையர். அடுக்காதவார்த்தையை அல்லும்பகலோதியே
பிடிக்கிறாய்பிடிவாதம் பேசாதேயென்றார்

நந்தனார். கடுக்காயைத்தின்பாரோ கன்னலதுபோலே
கொடுக்காததானாலும் கொள்ளுவீரென்றார்

புலையர் பித்தனென்றுசொல்லுவார் பேருலகிலெல்லோருஞ்
சத்தியமிதல்லவோ தள்ளுவீரென்றார்

நந்தனார் பித்தனாயிருந்தாலும் பிறவியறுத்தவர்க்கும்
முத்திகொடுக்குநல்ல மூர்த்தியவரென்றார்

புலையர். இத்தனைநாளுமிங்கே யில்லாதவார்த்தையைக்
கத்துறீரிதுவென்ன காரியமோவெனறார்

நந்தனார். இத்தனைநாட்சென்று ஈசனடித்தாமரை
பத்தியுள்ளமனந்தேறும் பாக்கியமிதென்றார்

அகவல்.

பாக்கியமீதென்று பரமசிவபத்தி
மார்க்கங்களெல்லாம் வரிசையாய்த்திரட்டி
எடுத்துரைசெய்வார் ஈனமானசாதி
பிடித்தறியாமற் பேசுவாரன்றோ.

விருத்தம்.

வக்கணைக்காரா நந்தா வாய்ப்படப் பேசவேண்டாம்
சக்கரை போலே பேசிச் சாதித்துக் கண்டாயன்றோ
பக்குவ காலம் வந்தால் பரமனார் திருநாமந்தான்
சக்கரை போலே தோன்றுஞ் சாதிப்பார் முத்திதானே.

வசனம்.

புலையர்களனேகராளபடியால் பலவிதம்பலர்சொல்லுகிறார்

ஏசல்.

இராகம்-இங்கிலீஷ்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

புலையர். ஆண்டிப்பரதேசி யரகரவென்பவர்
வேண்டுந்தெய்வமது விளங்காதேயென்றார்

நந்தனார். மூன்றுலகுக்கிறை முன்னின்றுகைகூப்பி
ஆண்டவனேயென்று அர்ச்சிக்குமென்றார்

வேறொருபுலையர். நாத்தைப்பிடிங்கியே நடவுநட்டாலிந்த
சோத்துகவலைவிடுஞ் சுகமிதுவென்றார்

நந்தனர். கூற்றுவனார்வந்து கூப்பிடும்வேளையில்
மாத்திரைப்பொழுதில்லை மன்னுயிரென்றார்

வேறொருபுலையர். மானுருமக்களும் வாழ்கின்றவிடத்திலே
யானுலுமெப்போது மழுமூஞ்சியென்றார்

நந்தனர். தேனைகவேமெத்த தித்திக்குஞ்சிவத்துதி
யானுலுமூங்களுக் கழுகைபோவென்றார்

வேறொருபுலையர். மூக்குநுனியைபார்த்துமுணுமுணுத்தென்னேர
காக்கைபோலவேசும்மா கதறுகிறீரென்றார் [ம்

நந்தனர். வாக்கிலேசிவநாமம்வாராதபாவிகள்
நாக்கிலேவூசியை நாட்டுவேனென்றார்

வேறொருபுலையர். மடைவாயின்பறவைபோல் மதியாமலிருக்கிறீர்
துடைகாலியீயென்று சொல்லுவோமென்றார்

நந்தனர். விடையேறுமீசனை வெட்டவெளியிலுன்னி
அடையாளங்காணுத ஆடுகளென்றார்

வேறொருபுலையர் மறையோதத்தெரியாத மடையராய்ப்பூமியிற்[ர்
குறையானபுலைத்தன்மைகொண்டோமேயென்று

நந்தனர். பறையனாய்ப்பிறந்தாலும் பாகதிதேடலாம் [ர்
உறுதிமாத்திரம்வேண்டும்உமக்குண்டோவென்று

வேறொருபுலையர். தலைசுற்றியாடுது தங்கச்சிகொழுந்தியார்
அலகைபோனாளென்றறிகிலேனென்றார்

நந்தனர். நலம்புரியுந்தில்லை நாதாவென்றிருநீற்றைத்
திலகம்போலேயிட்டு தெண்டனிடுமென்றார்

வேறொருபுலையர். உலகத்திலொவ்வாத உருவேத்திசேரியைக்
கலகமிட்டீர்பலங் கண்டீரோவென்றார்

நந்தனர். பலகாலுஞ்சொன்னாலும் பலியாதுபாழ்வினை
விலகாமலிருக்காது வேடிக்கையென்றார்

வேறொருபுலையர். திருப்புன்கூரீசனைச் சேவிக்கலாமென்று
விருப்புடனழைத்தது விந்தைதானென்றார்

நந்தனர். கரும்புதின்னகூலி கையில்கொடுப்பதுண்டோ
இரும்புமனதுக்காரற் கில்லையோவென்றார்

வேறொருபுலையர். புத்தியில்லாதவன் புலம்புகிறான்சிவனென்று
கத்தினாலுமென்ன காரியமோவென்றார்

நந்தனார். நித்தமொருதரம் நினைவுடனேசிவன்
சத்தமிருந்தாலென்றுந் தாழ்வில்லையென்றார்

வேறொருபுலையர். சேரியிலிருந்தாலும் செல்வங்குறைந்திடும்
ஊரைவிட்டாகிலும்நீ ரொதுங்குவீரென்றார்

நந்தனார். வாருங்களெல்லாரும் மன்னனைப்போலவே
சேருவோந்தில்லைச் சிதம்பரமென்றார்

வேறொருபுலையர். பாலாறுபெருகவே பண்ணையைப்பயிரிட்டு
ஆளாமலேவீணுக் கலையுறீரென்றார்

நந்தனார். பாலகிருஷ்ணன்தொழும் பாதத்தைநான்கண்டு
காலாம்பதவியை நாடுவேனென்றார்

வசனம்.

அவர்களில் ஒருபுலையர் உரைத்ததாவது எப்போதுஞ் சிவனைக் கொண்டாடினால்நம்முடையதொழிலுக்குகெடுதலுண்டு பண்ணைவிளையாதென்றுசொல்ல நந்தனார்கேட்டுச் சொல்லுவார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்

அரகராவென்றொரு குழிநட்டா
லங்கலமே விளையும்
தங்காமற் றுலையும்
சிவசிவாவென்றொரு தரஞ்சொன்னால்
சென்மசாபல மாச்சு-புண்ணிய
கன்மமதுவே யாச்சு
தில்லையம்பலத் தெரிசனங்கண்டால்
தேவரும் வருந்தாரோ-அந்த
மூவரும் பொருந்தாரோ
அடிமைக்காரத்தொழில் செய்வதுதுன்ப
மானாலு மேச்சே-சென்மம்
போனாலும் போச்சே

வசனம்.

நந்தனார்புலையர்களைப்பார்த்து அனேகஞ்சொல்லி நாளைப்போவேனென்று சொல்ல.

சிந்து.

நாளைப்போவாரென்றாராம் அங்கேநாடும் பறையர்களோடிவந்து அண்ணேநீபோகாதே-நமக்-காண்டைப் பொல்லாதவன்வேண்டிக்கொள்ளான் பாப்பாரசாதியுண்டே.

வசனம்.

இப்படிச்சொல்லிய புலையரைப்பார்த்து நந்தனார் சொல்லுகிறார்.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

ஆண்டைக்கடிமைக்காரனல்லவே-யா
னாண்டைக்கடிமைக்காரனல்லவே.

அநுபல்லவி.

மூன்றுலோகமும் படைத்தளித்திடும்
ஆண்டவர்கொத் தடிமைக்காரன் (ஆண்டைக்)

சரணங்கள்.

ஆசைக்கயிற்றினிலாடிவரும்-பசு
பாசமறுத்தவர்க்கடிமைக்காரன் (ஆண்டைக்)
தில்லைவெளிகலந்தெல்லைகண்டேற்றித்
தேற்றித்தெளிபவர்க் கடிமைக்காரன் (ஆண்டைக்)
சீதப்பிறையணிந் தம்பலத்தாடிய
பாதம்பணிபவர்க் கடிமைக்காரன் (ஆண்டைக்)

வசனம்.

என்னையடிமையாகக் கொண்டவேதியர் சொற்கேளாதவரல்ல அப்படியிருந்தும் பத்திபண்ணவேணுமென்றுபத்திநெறியைச்சொல்லிக்காட்டினார்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தவம்பெருமுனிவர்மெச்சுஞ் சரித்திரங்கொண்டநந்தன்
பவமயக்கறுக்கவேண்டிப் பகர்ந்திடுஞ்சிவவாக்கியத்தை
அவகுணங்கொண்டபேய ரறிந்திடப்போமோவெல்லாஞ்
சிவன்செயலாகுநம்மாற் செய்வதொன்றில்லையென்றார்.

வசனம்.

திருநாளைப்போவார் அநேகவிதஞ்சொல்லப்புலையர்கேளாமலிருந்ததினால் சிவன்செயலென்று நாளைப்போவார் சும்மாயிருந்தார்.

அந்தச் சேரியில்புலையர் கூட்டங்கூடி மூத்தோனால் நந்தனருக்குப் புத்திசொல்லும்வோமென்றெண்ணி அந்தச்சேரியிலே வெகுநாளாயி ருக்கின்ற ஓர்புலையர் வயதுமிகுந்து உடல்தளர்ந்து பல்களுதிர்ந்து தோல்கள் சுருங்கிநரம்புதெரிந்து முதுகுசரிந்து முழங்கும்வந்து அங்கம் சொரிபடர்ந்து தினவுமிகுந்து அதனைச்சொரிந்து அந்நீர்வடிந்து அவ்வுடல்நடுங்கி இவ்விதமிருக்கும் பெரியகிழவனுரையனுப்பக் கோலூணி கூனுகுருகி கோணலாய் நடந்துவந்துநந்தனரைப்பார்த்துகட்டியணைத்து தலைநிமிர்ந்து கண்ணீர்சொரிந்து மார்பில்விழுந்துமனங்கனிந்து காதல்மிகுந்து ஒன்றுந்தெரியாதவரென்று நினைந்து பரிந்து ஞாயமறிந்து சொல்லுவான்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

ஞாயந்தானோநீர்சொல்லும்-ஓய்நந்தனரே
நம்மசாதிக்கடுக்குமோ (ஞாயந்)

சரணங்கள்.

சேரியிலில்லா வழக்கம்-நீர்
செய்துக்கொண்டுவந்த பழக்கம்-இந்த
ஊரிலெங்குமது குழக்கம்-வெகு
உறுதியாச்சுது வொழுக்கம்-இது(ஞாயந்)

சிதம்பரமென்கிற பேச்சு-நாங்கள்
செய்திடுங்காரியம் போச்சு-அது
மதம்பிடித்ததுபோ லாச்சு-இந்த
மண்டலப்பறையருக் கேச்சு-இது(ஞாயந்)

பறையருக்கேதுதைப் பூசம்-அதைப்
பார்க்கவேயுனக்கு விஸ்வாசம்-சிறு
பயல்களுக்கே யுபதேசம்-நீர்
பண்ணிவைத்ததெல்லாம் மோசம்(ஞாயந்)

வசனம்.

சேரியில்பெரியகிழவனுனபடியால் சாதிவழக்கங்களெல்லாமறிந்தவனுதலால் நந்தனருக்கு இன்னமுஞ்சொல்லுகிறான்.

சிந்து.

பாப்பாரசாதியுண்டே-என்ன-பாடுபடுமுழக்காடுமங்கே நமக்குந்திருநாளோ-அந்தஞாயமுண்டோ என்னஞாயமிது, வென்றேதடை

செய்தார் சிவன்வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே அறியாது போலிருந்தார்.

பெரியகிழவன் சொல்லிய

விருத்தம்.

கழனிதனைதெய்வமெனச்சுற்றிவந்துதலைவணங்கிக்
கரங்குவித்து
உழுதுபரம்படித்துவிரை தெளித்துமுளைகொள்ளநீ
ரோடவிட்டும்
பழுதறநட்டதன்களைபைப் பிடுங்கிமடைதிறந்துபுனல்
பாயவிட்டுச்
செழித்திடவேபொங்கலிட்டுக் காத்தவராயனைவேண்டும்
செய்கைதானே.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

சுவாமிதெரிசனம்நமக்குண்டோ
சாதியன்றேவந்தநீதியறியாமல்

அநுபல்லவி.

பூமிதெரிசனம்போதும்போதும் வெகு
புண்ணியசோறு போடுமின்னமொரு (சுவாமி)

சரணங்கள்.

காத்துநரம்புகளைச்சுமப்பதும்உழுவதும்
நஞ்சைவயலைச்சுற்றிவருவதும் வளம்பெற
பாத்திகள்கட்டிவிரைப்பதும்பறிப்பதும்
பாயுமடையைத்திறந்திடுவதுமன்றியில் (சுவாமி)

சேரியிடையில்குடியிருப்பதும்-பதறுகள்
சிதறத்தூற்றிநெல்லளப்பதும் பார்ப்பதும்
வரைவளைந்துதமுக்கடிப்பதும் மதுக்குட
முண்டுகளித்துநாமுறங்குவதன்றியில் (சுவாமி)

ஆண்டைமார்களிடும்பணிவிடை செய்வதும்
அருகில்நின்றுகையைவிடுவதும்
தாண்டிகடந்துநெடுங்தோல்பிடிப்பதுமளப்பதும்
தனித்துச்சுடலைதினங்காப்பதுமன்றியில் (சுவாமி)

## விருத்தம்.

சாதியின்முறைமைகாட்டித்தடையிடப்போதுமென்றார்
வேதமாமுனிவராலும்வினவியுங்கண்டாரில்லை
பேதையாம்புலையருக்குப்பேரின்பநிஷ்டையேதென்
றுதலாலென்செய்வோமென்றம்பலத்தஞ்சுவாரே.

## வசனம்.

பெரியகிழவனைப்பார்த்து நந்தனார்சொல்லுகிறார்.

## இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

சிதம்பரதெரிசனங்காணாவிடிலிந்தச்சென்மசாபல மாமோ
செனனமரணசமுசாரம்பெருகவேசெய்தவினைகள் போமோ
சண்ணுங்கருத்திருக்கச்சிவனைக்காணாமல்காலங்கழிக்க லாமோ
காலபாசநமதருகில்வராமல்கண்டுபயந்து போமோ
இப்படியெப்போதுமிருப்போமென்றெண்ணியிருக்க லாமோ
இருதயமறிந்திடச்செய்திடுங்கன்மங்கள் இகழ்ந்துபிரிந்துபோமோ
பின்னுமுன்னுமறியாதமூடர்கள்புத்திகேட்க லாமோ
புலையாவாடியிருக்கினுமெய்திடும்புண்ணியங்கள் போமோ
பரமசிவனைக்கொண்டாடவேணுமென்றுபரிந்துபாவி பார்த்தேன்
பாபஞ்செய்பவற்குப்பலியாது அதில்பாடுபெட்டுப் பார்த்தேன்

## வசனம்.

சேரியிலுள்ளபுலையர்கள் கூட்டங்கூடி அனுப்பிவைத்தபெரியகிழவன்நந்தனாருக்குச் சொல்லக்கேட்டு ஆச்சரியப்பட்டுநந்தனார்கிழவனைப் பார்த்துச்சொல்லுவார்.

## இராகம் தெண்டகம் ஆதிதாளம்.

| | | |
|---|---|---|
| மீசைநரைத்துப்போச்சே | கிழவா | ஆசைநரைக்கலாச்சோ |
| பாசம்வருகலாச்சோ | கிழவா | பாவம்விலகிப்போச்சோ |
| கூனுகுறுகிப்போச்சே | கிழவா | கோபம்விலகிப்போச்சே |
| அங்கம்தளர்ந்துபோச்சோ | கிழவா | ஆங்காரமும்போச்சோ |
| சேரியைமறந்தாயே | கிழவா | சிதம்பரம்மறந்தாயோ |
| மானிடசென்மமடா | கிழவா | மாண்டால்வருமோடா |
| அம்பலத்தரசனடா | கிழவா | ஆளுந்தெய்வமடா |
| திருவடிபணியாயோ | கிழவா | தேடித்தெளியாயோ |

வசனம்.

நந்தனார் இவ்விதம்சொல்லி சிவகாமவல்லிபாகனைநினைத்து நீற ள்ளி பெரியகிழவன் முகத்திலேதடவி வாயிலேபோட்டு கட்டியணை த்துகாதிலே சிவமந்திரமுபதேசித்தார். உபதேசமானவுடனே பெரி யகிழவன்சித்தந்தெளிந்து சிவமாய்நிறைந்து உற்றதுணர்ந்துஒருவ னாயிருந்து அத்தனடியா ரருளிதுவென்று பத்திமிகுந்து பரவசங் கொண்டுபேசத்தெரியாமற்பேசுவான். நான் இன்றைக்குத்தான் பெ ரிய கிழவனானேன் நந்தா எனது பந்தந்தீர்க்கவந்தாய் முத்திதந்தா யென்று சுற்றிவலம்வந்து அடிபணிந்து விடைபெற்றுக் கண்டேன் கலிதீர்ந்தேன் ஆனந்தங்கொண்டேன்குறைதீர்ந்தேன் அமிர்தமுண் டேன் பசிதீர்ந்தேன் பிறவிவென்றேன் வீடுகின்றேனென்று பேசிக் கொண்டு பெரியகிழவனார் நந்தனாரா லுபதேசம்பெற்றுவருகின்றார்.

இராகம் சங்கராபரணம் ரூபகதாளம்.

பல்லவி.

பெரியகிழவன்வருகிறான் பேரானந்தக்கட்லாடி (பெரிய)

சரணங்கள்.

பரவியமாயையிலிருந்து பார்முதல்பூதங்களேந்து
பெரியவரென்றுணர்ந்து பேரின்பலாபத்தையடைந்து (பெரிய)

படிபுகழ்நந்தனார்மகிழ்ந்து பரமசிவபக்திபுரிந்து
கொடியவன்பாவங்கள்தீர்ந்து கூனிக்குறுகிநடந்து (பெரிய)

நந்தனார்சொன்னதறிந்து நானென்றுரையுமிழந்து
பந்தமயக்கந்தெளிந்து பரவெளியாகநினைந்து (பெரிய)

வ-ம். புலையர்களெல்லாங் கூட்டங்கூடி நந்தனாருக்குச் சிதம்ப ரப்பித்துத்தெளிய புத்திசொல்ல வனுப்பிய பெரியகிழவன் நந்தனா ர்பித்துகொண்டு அவருடைய மகிமையெல்லாம் புலையர்களிடத்திற் சொல்லிக்கொண்டாடுவான்

பெரியகடுக்கா.

திருநாளைப்போவாரிந்தச்சேரிக்குமூருக்கும்
யாருக்குபெரியவன் திருநாளைப்போவார்
ஒருதரமாகிலுஞ்சிவசிதம்பரமென்று
உரைத்திடீரென றுண்மைகூறிய திருநாளைப்

அடாதுசெய்தால் படாதுபடுவீர் விடாதுபாவந்தொடாது அ வன்பேரிடாதே தூறபடாதே கைபிடிபடாதே வெம்பகையிடாதே

அப்பா திடாங்கன் கோபப்படாது பட்டால்விடாது சலம்படாதவன் பயப்படாதவன் இடங்கொடாதன் அடங்கிடாதவன் நிலைவிடாதவன் மறபடாதவன் மனம்விடாதவன் அடங்கிடாதவன் விடையவலைப்படான் மாலைக்ககப்படான் யிடைவிடான் கழனிகளைநடான் கலப்பைகளைத்தொடான் நமதுவழிபடான் பொலிகிடாரி எல்லைப்பிடாரி வெல்லப்படாது சொல்லப்படாது கல்லப்படாது தள்ளப்படாது யாரையும்விடாது துன்பந்தொடாது வழியைத்தேடாது இருவினைப்படாது சென்மங்கெடாது தெய்வங்கெடாது அவன்கைவிடாது வேறுபடாது ஆசைபடாமல் அருளைக்கொடாதுபங்கப்படாத தங்கக்கடாரம் பொங்கபடாதவன் இணைவிடாத புண்ணியதடாகஞ்செய்தவன் மடாதிபதி பிடிபடாதசிங்கம் அளவுபடாத மகிமைவிடாதபெரியவண்டா தெரிசனப்படா சந்நிதிவிடாத நந்தியசைந்தேனடா அரன்விலகடா வென்றசொல்லடா அவனைப் பணியடா தூளையணியடா அறிந்துபோற்றடா கையெடுத்தேத்தடா மலரைத்தூற்றடா மனதைதேற்றடா பிறவிமாற்றடா ஆனந்தக்கூத்தடா சொன்னேன் திருநாளைப்போவார் இந்தசேரிக்கு மூருக்கு மாருக்கும் பெரியவன்

வசனம்.

இப்படிபெரியகிழவன் சொல்லக்கேட்டு நந்தனாலே கெடுக்கப்பட்டபதினொருபேர்களுக்குள்ளே நீயும்பனிரெண்டாம் பேராயிருக்கத்தலைப்பட்டு சிவசிவாவென்று சொல்லிச்சேரியைக் கெடுக்கத்தலைப்பட்டீர்களே கிழவாவென்று மிகவுந் துன்பமடைந்து புலையர்கள் ஒருவர்க்கொருவர் சொல்லித் துயரப்படுகிறார்கள்.

இராகம் புன்னாகவராளி ரூபகதாளம்.

பல்லவி.

நாமென்னசெய்வோம் புலையரே இந்தப்
பூமியிலில்லாத புதுமையைக்கண்டோம் (நாம்)

சரணங்கள்.

நந்தனொருவனாலேயிப்படி யாச்சு
நன்மையுந்தன்மையுமில்லாமற் போச்சு
சந்திற்குச்சந்திகூத்தாட லாச்சு
சாமியுமில்லாமல் எங்கயோ போச்சு (நாம்)

கன்னற்கற்கண்டவ்வார்த்தைகேட் பாரோ
காதிற்பட்டாலதை கருத்துட்கொள் வாரோ
மன்னார்சாமிக்குப் பூசைபோட் டாரோ
மாரியாத்தாளங்கே மறைந்திருக்கி றாளோ (நாம்)

சேரிக்குள் பதினொரு பேர்களுங் கெட்டார்
செய்யுந்தொழில்முறையாவையும் விட்டார்
ஊருக்குப்பெரிய கிழவனும் பட்டான்
உண்மையறியாமற் சிதம்பரந் தொட்டான் (நாம்)

வசனம்.

சேரியில் துன்பமடைந்தபுலையர்களைப்பார்த்து உங்கள்தெய்வத்துக்கு வழக்கம்போலே பூசைப்போட்டுபலியிட்டுவேண்டினால் சேரிக்குநல்லகாலம் பிறக்குமென்று பெரியகிழவனார்சொல்லப் புலையர்கள் பூசைபோடுந் தெய்வங்களாவன.

வீரன்-இருளன்-காட்டேரி-வெரியன்-நொண்டி-சாமுண்டி
தூறித்தூண்டி-நல்லண்ணன்-தொட்டியச்சின்னான் பெத்தண்ணன்
மாறுமுனியஸ்-சங்கிலியும்-லாடன்-கறுப்பன்-பாவாடை
மூறிக்காத்தான்-குழியரிசி-மோகினி-சத்தகன்னிகையும்
சேறிமன்னரன்-மின்னடியான்-சிறுக்காட்டுடையான்பனைமரத்தான்
மாரியாண்டு-வழிமறித்தான்-மலையன்சாத்தன்-பக்கிரியும்
எரியனுஞ்-சிலம்பாயி-இடையன்-நல்லான்-ஊமையொடு
வீறுங்கல்லன்-பெத்தாச்சி-வீட்டுதெய்வமுதலான.

வசனம்

இதுகளைத் தெய்வமென்றுவணங்கிக்கொண்டாடவனங்கோழி ஆடுகளுடனே மதுக்குடம்வைத்து பள்ளயம்போட்டு பம்பையடித்துவருந்தச் சன்னதம் வருஞ்சொன்னேன்சேரிக்கு நல்லகாலம் பிறக்கும் சிதம்பரப்பித்து நந்தனருக்குத்தெளிந்துவிடுமென்றுபேர்பெருகவாழ்வீரென்றும் பெரியகிழவன் சொன்னாரே? அப்படியே கிழவன் சொல்லை நம்பிக்கைகொண்டு புலையர்களெல்லாரும் பந்தலிட்டு பள்ளயம்போட்டுக் கொம்பும் தம்பட்டை முழங்கிமுப்பூசையிட்டு வேண்டுவார்கள்.

அகவல்.

புலையர். எல்லைபிடாரியே எதிராகவந்தெனம
கொள்ளையுன்காவலாய் கொள்ளடி என்றார்

நந்தனர். சொல்லிலடங்காதுசோதிபரமானந்தத்
தில்லைநாயகரைத்தேவ ரரியாரோ

புலையர். முண்டாசுகட்டிவரும் நொண்டிவீரப்பனைக்
கொண்டாடிபூசைகளைக் கொள்ளுவீ ரென்றார்

நந்தனர். அண்டங்கள்பதினாலுக் கப்பாலுமிப்பாலும்
நின்றார்க்குமுண்டாசி நிலைபாது என்றார்

புலையர். கக்சையரிவாள்வைத்த கருப்பண்ணசுவாமியை
இச்சையுடன்வேண்டி யென்றெய்வ மென்றார்

நந்தனர். பச்சிலைபிடுங்கியே பாதத்திற்சாற்றினல்
இச்சையானதுமீயு மென்றெய்வ மென்றார்

புலையர். நேயமறிகோழியும் நிணமூன்றுசாவலுந்
தீயகள்ளும்வைத்து தெரிசித்து நின்றார்

நந்தனர். வாயாலேசிவவென்று வருந்தினலெப்போதும்
தாயாரைப்போலவே தழுவிவரு மென்றார்

புலையர். பித்துப்பிடித்திருக்கும் பேயனாம்நந்தனுக்கு
சித்தந்தெளிந்திடச் செய்திடுவீ ரென்றார்

நந்தனர். பத்திவெள்ளம்பெருகிப் பாய்ந்தானுஞ்சேரியில்
நத்தையுறிஞ்சுஞ்சாதி நாடாது யென்றார்

வசனம்.

இவ்வகைப்பூசைபோட்டுத் தெய்வங்களைக்கொண்டாடும் புலையர்களைப்பார்த்து நந்தனர் சொல்லுகிறார்.

விருத்தம்.

இத்தனைநாட் பரமசிவன்றிருமகிமை யிரவுபகலெடுத்துச்சொன்னேன், பத்திபுரியெந்தமக்கே யருள்புரிந்தவையன்பதம் பணிவீரென்றேன், அத்தனையுமிழந்திடவேமனவெறுப்பாயென்றனையுமவமானித்தீர், புத்திசொல்வேனென்றவர்கள் மூழந்தாளிட்டடிகொண்டு புனைந்திட்டாரே.

வசனம்.

நந்தனார் மகாபலசாலியானபடியால் புலையர்களைச் சிட்சித்துச் சிவநாமத்தைச் சொல்லச் சொல்லுவார்.

தண்டகம்.

தத்திப்புலிபோலே தாண்டிக் குதிப்பார்
முத்தமிடுவதுபோலே முகத்தைக் கடிப்பார்
வார்கொண்டுகட்டி வளைத்துப் பிடிப்பார்
தூர்க்கல்லெடுத்துத் துடைக்குள் ளெரிப்பார்
பல்லாற்கரண்டியே பரம்படித் திழுப்பார்
கல்லாலெறிந்துமவர் காயப் படுத்துவார்
குப்புறத்தள்ளியே கோபித் துதைப்பார்
செப்பியசிவனைநீர் சேவிப்பீ ரென்றார்

வசனம்

இப்படி சிட்சித்தபின்பு புலையர்களெல்லோரும் நந்தனாரடிக்குப்பயந்து பத்திசெய்யத்தொடங்கினார்.

கடுக்கா.

அரகரசிவசிவ அம்பல வாணா
தில்லையம்பலதேசிக நாதா
புரமுன்றெரித்த பொன்னம்பல வாணா
கரியுரிபோர்த்த கருணா கரனே
அனுதினமன்று ளாடிய பாதா
பிழைபொறுத்தாளும் புண்ணிய மூர்த்தி

வசனம்.

மூடப்புலையர்களுக்குப் புத்திதருவாயென்றுசுவாமியைத்தொழுதுசொல்ல அவர்களு மிப்படிச்சொல்லித் தொழுவார்கள்.

இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பத்திகள்செய்தாரே-பரமசிவ-பத்திகள்செய்தாரே

அநுபல்லவி.

பத்திகள்செய்தார்-நற்றவம்புரிநந்தன்
சித்தமகிழ்ந்திட வத்தனைபேர்களும் (பத்திகள்)

எடுப்பான் சிவகதை படிப்பான் தடியொன்று
பிடிப்பான் காலுக்கு அடிப்பானென்றே (பத்திகள்)

கல்லாதவனிங்கே சொல்லாதவனன்றி
யில்லாதவன் வெகு பொல்லாதவனென்றே (பத்திகள்)

வசனம்.

அந்தச்சேரியிலே புலையர்கள் பத்திசெய்ததால் சேரிசிவலோகம்போல விளங்கியது சிலநாளுக்குப்பின்பு புலையர்களெல்லாங் கூடி நந்தனரைப்பணிந்து நல்லவார்த்தைசொல்லி நாங்களெல்லோரும் நாளொன்றுக்கு மூன்றுவிசை சிவனேயென்று சொல்லுகிறோம் மற்றவேளையில் எங்கள் பண்ணைத்தொழிலைச் செய்வோமென்றுகேட்க நந்தனர் நல்லது அப்படியே தப்பாமல் செய்யுங்களென்று நந்தனர் சொல்லிவிட்டுச்சேரிபெரிய கிழவனுடன் திருப்புன்கூருக்குப்போய் வந்து பக்திபுரிபுலையர்கள் நந்தனைசுற்றி அடிபணிய அவர்களைப்பார்த்துச்சொல்லுவார்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொள்ளையெனும் பிறவிவிரை மூணைவீசாமற்
குடிவாறிப் போவதற்கோர் வகையைக்கேட்கக்
கள்ளமனக் குரங்கதனைல் விடையமாச்சு
கட்டியிருந் தாலிருந்த விருத்திபோச்சு
உள்ளங்கைக் குள்ளிருக்குங் கனியைப்போல
உருவிலா தான்மாவே ரறுத்த வாழ்வீர்
எவ்வளவும் பிசகில்லை யென்ற ஞாயம்
எற்றுவார் மும்மலத்தைத் தூற்றுவாரே.

இராகம்-எதுகுலகாம்போதி-ரூபகதாளம்.

பல்லவி.

பார்த்துப்பிழையுங்கள்-நீங்கள்
பார்த்துப்பிழையுங்கள்

அநுபல்லவி.

பார்த்துபிழையிந்தச் சோற்றுத்துருத்தியை
எத்தித்தொழவேண்டாம் காற்றுப்போகுமுன்னே (பார்த்)

சரணங்கள்.

ஆத்திமதிசூடுங் கூத்தனிடமாகச்
சூத்திரத்தையிந்த க்ஷேத்திரத்துள்ளாடி (பார்த்)

வீற்றிருப்பீர்காலன் காத்திருப்பான்சிவ
சாத்திரத்தைஞான நேத்திரத்தாலுற்றுப் (பார்த்)

மூலக்கனல்தாண்டி மேலக்கரைவந்து
பாலக்குடியிந்த நாலுக்குள்வாராமல் (பார்த்)

பாலகிருஷ்ணன்றெழுங் கோலக்கண்களை
மேலுக்குமேல்நாடி சாலக்கலியறப் (பார்த்)

இராகம்-யமுனாகல்யாணி-அல்லது
சாரங்க-ரூபகதாளம்

பல்லவி.

தில்லைச்சிதம்பர மென்று-ஒரு
தரஞ்சொன்னால் பரகதியுண்டுண்டு

அநுபல்லவி.

நல்லசுருதிமுடி கண்டு-சபா
நாதன்றிருத்தாளைச் சிந்தையிற் கொண்டு (தில்லை)

சரணங்கள்.

வேரில்லாமலொரு விருட்சமொன் றிருக்கு
விளையும்வினைகளெல்லாஞ்செய்யுந் திருக்கு
பேரில்லாமல் ஞானத்தீகொண்டு கருக்கு
பேரின்பவாணரைப்பிசகாமல் நெருக்கு (தில்லை)

தேசம்புகழுந்தில்லைக்கோயில் வளர்ந்து
தித்திக்குஞ்சுவைபஞ்சாட்சரம் புரிந்து
ஆசையுடனேயர்த்த சாமத்தி லிருந்து
அங்கம்புளகிதமா யடிக்கடி பணிந்து (தில்லை)

மாயன்கோபாலகிருஷ்ணன் தினந் தேடி
வருந்துஞ்செந்தாமரை மலரடி நாடித்
தாயைப்பிரிந்திளங் கன்றுபோல் கூடித்
தனித்திருந்தும்தாளம்போட்டுக்கொண் டாடி (தில்லை)

வசனம்

இப்படிச் சொல்லிய நந்தனரைநோக்கி அவர்கள் சொல்லுவார்

இராகம்-சவாயி-கண்டகம்-சாப்புதாளம்.

அவர்கள் புண்ணையவிந்தப் பிறவிபிணிக்குமருந்
துண்டாயிருப்பதுவுண்மையோ நந்தா

நந்தனர் கண்ணாலேபார்த்திடில் காட்டிமறைத்திடும்
மண்ணானபூதங்கள் மாயமே மைந்தா

அவர்கள் இருப்பதுபொய்யென் றிராததுமெய்யென்று
இருந்திப்பேசியவகை யென்னடா நந்தா

நந்தனர் உருத்தெரியுநாம ரூபமல்லவோ
கருத்திருக்கிக்கொண்டால் காணலா மைந்தா

அவர்கள் வித்தாரமாமிந்த பிண்டயானமெத்தை
பத்திக்கொண்டிருக்கா பகர்ந்திடும் நந்தா

நந்தனர் வித்துக்குள்விருட்ச மடங்கியவாறுபோல்
சத்துக்குள்ளண்டசராசர மைந்தா

அவர்கள் புத்திக்குளெட்டாதபோதத்தைநாமுண்டு
முத்திபெரும்வழிமொழியும்ம நந்தா

நந்தனர் அத்தனிருக்குமிடமன்னமயாதிகள்
பத்துதலில்லாபரவெளி மைந்தா

அவர்கள் தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கடந்திடும்
வஸ்துவைநாமெண்ணும்வகையேது நந்தா

நந்தனர் நித்திரையொழித்தபின்னினைவுடனேகூடி
உத்தரம்பேசியதுண்மையே மைந்தா

அவர்கள் பித்தனைலேயொரு பேய்பிடித்தாற்போலுன்
சித்தவிகாரங்கள் தெளியுமோ நந்தா

நந்தனர் பத்திவலைவீசிப்பார்த்திடும்வேளையில்
தத்திக்குதித்திடுந் தாண்டவம் மைந்தா

அவர்கள் சிலமுள்ளநல்ல சேதிசொன்னாயுன்றன்
காலுக்குச்கும்பிடக்கண்டோம்ம நந்தா

நந்தனர் பாலுக்குச்சர்க்கரை பலித்ததுபோலுங்க
ளாலேயன்றோவீடுநாடாது மைந்தா

அவர்கள் தூலசரீரத்தைச் சுமந்துபிள்ளைப்பூச்சி
போலேயானோமுந்தன் புண்ணியம் நந்தா

நந்தனர் பாலகிருஷ்ணன்தொழும் பரமசிவனரு
ளாலேபொங்கிவரு மானந்தம் மைந்தா

விருத்தம்

ஓங்கார மென்றுசொல்லு மாலைப்போட்டங்
குறுதியெனு மிருப்புலக்கை கையிலேந்தி
வாங்கார மென்றசட்டு வாகையிட்டு
வடிக்கடியே கண்ணியத்தைப் படைத்தெடுத்து
நீங்காத சிவயோக நிஷடை கொண்டு
நிர்மலம தானவருஞ் சுற்றி வந்து
பாங்கான நந்தனிரு தாளைப்போற்றிப்
பணிந்திட்டார் திருநீற்றை யணிந்திட்டாரே.

வசனம்

அவர்கள் நந்தனாரைவிட்டு நீங்கி தனித்திருக்க மனம்வசாமல் சொல்லுவார்கள்.

விருத்தம்

தில்லையிற் போகவேண்டாந் திரும்பிவந் தாலுமும்மைச்
செல்லாது பண்ணைப் பார்ப்பான் சினங்கொண்டபடியாலிந்த
எல்லையி லிருந்து தானே யீசனார் திருநா மத்தைச்
சொல்லிய நாலாம் வீட்டிற் சேருவோம் வாரீ ரென்றார்

வசனம்.

அனல்கண்ட மெழுகதுபோலுருகிப் பத்திவெள்ளம் பெருகிச் சொல்லிய பேர்களை நந்தனார் சாமாலிங்கனம்பண்ணிகண்ணீர்சலம் பெருகச்சொல்லுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

தில்லைவெளியிலே கலந்துக் கொண்டாலவர் திரும்பியும்வருவாரோ
எல்லைகண்டபேரினி பிறவாரென்றியம்புவ தறியாரோ
பெண்டுபிள்ளைகள்வெறுங் கூட்டமது பேய்ச்சுரைக்காய்தோட்டம்
கண்டுகொள் பெரியோரறிவில் கனகசபையினாட்டம்.
திருவாதிரையில் தெரிசனங்காணத் தேடித்திரியாரோ
அரிதாகிய விந்தமானிடங் கிடைத்தா லானந்த மடையாரோ
குஞ்சித பாதத்தைக் கண்டா லொழிய குறையதுநீங்காதே
சஞ்சிதக் குமராதிக ளூடாடிய சடலமுந் தாங்காதே
சேரியிடையிலே குடியிருந்தா லிந்தச் செனனமுந் தொலையாதே
சிதம்பரம் போவேன் பதம்பெறுவேன் தடை செய்துமறியாதே
இரவும்பகலு மொழியாதக் கவலையி லிருப்பது சுகமோடா
இன்பம் பெருகும் பரமானந்த வெள்ளமிழந்து நீபோடா

வசனம்.

சிதம்பரம் போவேன் நீங்களிங்கே யிருங்களென்று நந்தனார் சொல்லுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

சிந்தனைசெய்துக்கொண்டிருந்தாலுங்களுக்
கெந்தவிதமுங்கரை யேறலாம்சிவ (சிந்தனை)

வந்தனைமுனிவரு மிந்திரவமரரும்
வந்துபணியுமவர் விந்தபொற்பாதத்தை (சிந்தனை)

மாமனைவதைத்தவன் காமனையெரித்தவன்
மானமழுதரித்தவன் தாமரைபாதத்தை (சிந்தனை)

தம்புருவணிந்திடுந் தும்புருநாரத
ரும்பணியும்பொன் னம்பலவாணனை (சிந்தனை)

வெம்பியதும்பிக் கருளியபாலகிருஷ்
ணன்பணியுந்திரு வம்பலநாதனை (சிந்தனை)

இராகம்-பூரிகல்யாணி-அல்லது-சாமராகம்-ஆதிதாளம்

பல்லவி.

தில்லைத்தலமென்று சொல்லத்தொடங்கின
லில்லைபிறவிப்பிணியும்பாவமும்

அநுபல்லவி.

சொல்லத்தகுமோசிவலோகம்
எள்ளத்தனையறஞ் செய்யிலாமோகங் (தில்லை)

சரணங்கள்.

ஆகமவேதபுராணங்கள் சாஸ்திர
மருந்தவம்புரிவாற்கு வருளிய பாத்திர
மாலையமாயிரத்தெட்டினு நேத்திர
மானந்தத்தாண்டவமாடிய க்ஷேத்திர (தில்லை)

கணத்திலாடுமணிமாதி சித்தியுங்
ககனத்திலாரும் விண்ணுடர்கள் வெத்தியு
மிணையில்லாதகுருசாஸ்திர பத்தியு
மிகத்திற்ருனேவருஞ்சிவபத முத்தியும் (தில்லை)

பரமரகசியமொன்று பார்க்கலாம்
பாலகிருஷ்ணன் கவிபாடிக் கேட்கலாம்
கருமவினைகளடங்காமற் போக்கலாம்
கசடர்கட்கு முத்தியுண் டாக்கலாம்(தில்லை)

வசனம்

நந்தனார் ஞானவுபதேசஞ் சொல்லக்கேட்டு முன்னே நந்தனாருடன் திருப்புன்கூரிற்போய்ச் சிவதெரிசனஞ் செய்துவந்தவர்களாகிய அறுவன்தொங்கி-ஆனைப்பறி முக்குமாறிப் பழனி நாத்தான் பாச்சலூரான்-ஆண்டி-தேவகன்-செ,றியன்-வெறியன்-காணியன் எல்லைச்சுற்றி பெரியகிழவன இந்த ஆறுபேர் ஞானமடைந்து அவரவர்கள்நிஷ்டையிலிருக்கத்தொடங்கினார்கள் மற்றபுலையர்கள் கூட்டங்கூடி நந்தனார் நமமைகொன்றுக்கு மூனறுதரஞ்சிவநாமத்தைச் சொன்ன குற்றத்தைப்பாராட்டி நந்தனையடிமைகொண்ட அந்தணனிடத்திற் சொல்லுவார்கள்.

விருத்தம்

இரவுபகல்பரமசிவனிணைபடியேதொழுதிருக்குமின்பங்கூறி [ரும்
கரைபுரளுங்கடலதுபோறசிவத்திடை கருத்துணரகண்டெல்லோ
பரவிவருமபுலையர்களும்பண்புறச்வநெறிகாட்டிபபகரக்கேனீர்
அரியதொருநந்தனிவனடிமைபுரியந்தணர்பாலறிக்கைசெய்வார்.

கொண்டிச்சிந்து-இ-ம்-பைரவி-ஆதிதாளம்

ஐயேஒருசேதிகேளும்-உங்கள்-அடிமைக்காரபறையனடத்தையெல்லாம்-வரவரக்கெட்டுப்போச்சு-சேரியில்வழக்கமில்லாதபடி பழக்கமிட்டான்-குடியிருக்கமாட்டோம-எப்போதும் கூக்குரல்போடுகிறுனுக்கைமறந்தே, இருப்பானொருவேளை கொள்ளாத-ஏக்கமடைந்தவன்போல் காக்கைவளைத்துசசிரிப்பானொருவேளை-தில்லைசிதம்பரமென்றுசொல்லி-மதப்பிடித்தே-அழைப்பானொருவேளை-எங்களையும் அண்ணனவாவென்று சொல்லிக் கிண்ணாங்கொட்டி குதிப்பானொருவேளை தசிக்குழக்கல்கொண்டவன்போலெதையோ கண்டவன்போல் களிப்பனொருவேளை-மரம்போல கையசக்கல் காலசைக்கல் மெய்யசைக்கலும் இருக்காதொருவேளை தாளம்போட்டெக்களி கொட்டியே குடிசிக்குட்புகுந்துபேசானொருவேளை கண்டதெல்லாம் பிரட்டென்று சொல்லுவான் முரட்டுத்தனம் மன்னர் சாமிபோலேகிளம்பி-வாய்விட்டலறுங்குரலோரட்டும்மே ஐயோசிவனே யென்பான் கீழ்புரண்டழுவானியானையுநதொழுவானே-ஆண்டிமீனதுபோலே- துள்ளித துள்ளித துடிப்பான் பறகளைக்கடிப்பானே-சிவ

னென்றுறான் றுனிசை நீங்குளுஞ் செப்பவேணுமல்லாவிடில் வப்பினு றைப்பான் கோயிலிற் போம்வாமெ பான் - எங்களையும் கும்பிடச் சொல்லியில்லா வம்புபண்ணுவான், சுற்றிவரச் சொல்லியடிப்பான் சிவன்பேரைச்சொல்ல சந்நிதியில் நில்லடாவென்பான்-சொல்லித் துலைக்கவேணும் இல்லாவிடில் சுக்குமாந்தடிக்கொண்டு நொறுக்கி விடுவான்-கொம்பேறி மூக்கன்போல-முதுகினில் குத்துவான் புலி போலேதத்துவானே-இதுவென்ன காரணமோ எங்களுக்-கினமாயிரு க்குது மாமல்லவோ கறுப்பண்ணசாமிதானும்-இருளன் காட்டே ரிவீரனிவன் வீட்டேறியோ-பாவாடை துரைதானோ-ரணபத்திரகா ளியோவுன் மத்தவீரனோ-பூசைகள்போட்டு பார்த்தோம்-ஒன்றிலும் போவதில்லை காரியமாவதில்லை எங்கள்வள்ளுவரைகேட்டோம்அவர் எடுத்துச்சொன்னரிதைவிடுத்துச்சொன்னர் மயான உருத்திரனர்- பிடித்து-வாட்டுதடா-இப்படி யாட்டுதடா-தெளியாதென்று சொன் ஞர்-ஐயே-தெளியாதென்றுசொன்ஞர்.

இராகம்-கன்னடா-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

சேதிசொல்லவந்தோம்-நந்தனர்-சேதிசொல்லவந்தோம்.

அநுபல்லவி.

சாதிமுறைமைதெரி யாதவனுமக் கத
வாதவனென்றொரு மாதமாய்த்தெரிந்த (சேதி)

சரணங்கள்.

ஏறைப்பிடித்துச்சற்றே உழுவான்-மன
தேங்கித்தன்னாடியே விழுவான்-எங்கள்
சேரியைப்பார்த்தே யழுவான்-சிவ
சிதம்பரமென்றே தொழுவானையே (சேதி)

நாத்துமுடியைக்கையி லெடுப்பான்
நடத்தெரியாமலே விழிப்பான்-இதைப்
பார்த்திடும்பேர்களைப் பழிப்பான்-அடே
பாவியென்றெங்களை அடிப்பானையே (சேதி)

உதட்டையசைத்துமுணு முணுப்பான்-அவன்
ஊணுறக்கத்தையுந் துறப்பான்-நாங்கள்
அதட்டிப்பேசினு லடிப்பான்-பொன்
னம்பலவாணனை படிப்பானையே (சேதி)

இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி

அடக்கியாளுமையே-இவனை-அடக்கியாளுமையே

அநுபல்லவி.

அடக்கியாளுமிக்குத் தடிக்குக்காரனிவனை
யடித்துப்பிடித்துக் கண்டித்துபடபடத்து (அடக்)

சரணங்கள்.

பொன்னம்பலவாணனென்றிவன் பேசி
பொழுதைபோக்குவான்சாம்பலைப் பூசி
சனனதம்கொண்டவன்போலவே வாசி
சண்டைபிடிக்கவருவானிவன் தோசி (அடக்)

பலித்துதையேயொருமந்திரம் போட்டான்
பழமையான இனிதங்களைக் கூட்டான்
குலதனைதகெடுக்கவந்திவனொரு கோட்டான்
கோபககாரனெங்களவழிபட மாட்டான் (அடக்)

குளத்தைகெட்டச்சொல்லிக்கூலியைக் கொடுத்தான்
கூட்டிக்கொண்டு பாய்பயல்களை கெடுத்தான்
களத்தைச்சீககவெமங்களை விடுத்தான்
காடுமண்டிவருஞசுடலையிற் படுத்தான் (அடக்)

வசனம்

சேதிசொல்லவந்தபுலையர்களைப்பாத்து வேதியன்சொல்லுவான்

விருத்தம்.

காலமேவந்தானிங்கே கள்ளக்கும்பிடுகள்போட்டு
பாலனைப்போலேபேசிப் பசப்பினான்போடாவென்றேன்
வேலைசூழுலகிலிந்த வினைப்போலேகாணேன்
சீலமாஞசிதம்பரத்தைச் சேரம்வவிடைகொடேனே.

வசனம்.

அந்தணர் சொன்னமொழியைப் புலையர்கள்கேட்டு மிகவுஞ்சந்தோஷங்கொண்டு சேரிவந்துசேர்ந்தபின நந்தனெட்போதுமபோலே அந்தணரிடத்தே வருகிறார்.

துக்கடா-ஆதிதாளம்.

நந்தனாரும்வந்தார்-வெகு
சொகதமானதங்களையாைக்காண (நந்த)

அங்கமுழுதிலுந் நீறுபூசியே- அரகரசிவசிவவென்றுபேசியே
சங்கையாருந்திருக்கண் கள்வீசியே-சுவாமி என்றுதன்னைமேசியே
தில்லைச்சிதம்பரம்பளனுபாடியே தேர்சனங்காணவென்றுவாடியே
அல்லலறுஞ்சிவலோகந்தடியேயடையவேணுமென்றிங்கேநாடியே

விருத்தம்.

சாதிகுலப்பிறப்பென்னுஞ்சந்தேகந்தெளியாதுதாணையிற்கும்
பேதகுணம்பற்றறுத்துப்பேரின்பம்வருவழிதப்பிமணிக்காக்கும்
ஆதிபராபரமெனனுந்திருச்சிற்றம்பலத்தைக்கண்டானந்திக்க (னூர்
வேதமொழிவிளங்கவருந்திருவாயால் விடைகொடுத்துவிடுவீரென்

இராகம்-உசேனி-ரூபதாளம்.

தில்லையம்பலத்தலமொன் றிருக்குதாம் கண்டபேர்க்கு
சென்மமானபிணியைக் கருக்குதாம்

உயருஞ்சிகரக்கும்பந் தெரியுதாம் பார்த்தபேர்க்கு
உள்ளங்குளிரக்கருணை புரியுதாம்

பண்ணவாயன்மாலுந் தேடுமாம் தில்லைக்காட்டில்
பாம்புபுலிக்குநிர்த்த மாடுமாம்

அரியபிரமனெழுத்தைத் தள்ளுமாம் ஆரையுமது
ஆனந்தமுழுக்காட்டிக் கொள்ளுமாம்

போய்வருபவர்புண்ணிய சவியாம் தருமராஜன்
புறத்தில்பழுதுவந்து சேவியாம்

உருவில்லாகுருவொன் றிருக்குதாம் மூலக்கனலை
ஊதிஎழுப்பிக்காணப் பெருக்குதாம்

உருவமாகிவெளியே வருகுதாம் நான்மறைக்கும்
உணர்வில்லாதகாட்சி தருகுதாம்

போய்வருகஉத்தாரந் தாருமே பொன்னடித்தூள்
போற்றும்வனகண்ணாலே பாருமே (தில்லை)

வசனம்.

சிதம்பரம் போவேனேயென்று அந்தணர்கேட்க நந்தனர்சொல்லுகிறார்.

இராகம்-சுருட்டி-ஏகதாளம்

தாதரிகிட தககசந்தரி சன்தசநா ததிமி தகடத கணந்தரிதின தத்திம் தககசந்தரிகுந்தரி ங்த கணைந்தனன்ந தனனந்தனந தனந்தசணதச தண தத்தினஞகிடதகதோந் தத்தினஞகிடதகதோந் தத்தினஞகிட தககதோம்.

பல்லவி.

ஆடியபாதத்தைக்காணுரே-பிறந்-தானந்தம பூணுரே

அநுபல்லவி.

நாடுந்தைப்பூரண பூசத்திலேதில்லை
நாயகனார்குரு வாரத்திலேமன்றுள் (ஆடிய)

சரணங்கள்.

பாசமறுத்துடல் வாசியொடுக்கி
பக்திபண்ணுங்காட்டில் பாம்புபுலிக்கி
ஆசையுடனேநல் லருளைப்பெருக்கி
அன்பர்க்களிக்கச் சிலம்புகுலிக்கி (ஆடிய)

கொட்டமடிக்கும் புலன்தொழில்நீக்கி
கோடிகாலஞ்செய்த பாழ்வினைபோக்கி
வெட்டவெளியிலே நெட்டிடத்தூக்கி
வேதம்பணிந்திடத் தென்முகம்நோக்கி (ஆடிய)

சேனுஞ்சடைபுனல் பூமியில்சொட்ட
சேவிதநாரதர் பாடியேகிட்ட
கோணங்குவிந்தண்ட கோளமுமுட்ட
கோபாலகிருஷ்ணனு மத்தளங்கொட்ட (ஆடிய)

வசனம்.

ஆனபடியால் நான் சிதம்பரம்போக உத்தரவு தரவேணுமென்று அந்தணரைத் திருநாளைப்போவார் கேட்கிறார்

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உத்தாரந்தாருமையே-எனக்
கொருவருமில்லைபரகதியடைய (உத்தாரந்)

அநுபல்லவி

வித்தைகள்கற்றதுமில்லை யாதொரு
பதியிற்சென்று பரகதியடைய (உத்தாரந்)

சரணங்கள்

குற்றங்களெத்தனை-கொடியேன்செய்தேன்
அத்தனையும்பொறுத் தாதரவாக (உத்தாரந்)

பெண்டுபிள்ளையென்று-பேயனைப்போலவே
கண்டுகளித்துக் காலங்கழித்தேன் (உத்தாரந்)

தில்லைசிதம்பரத்தை தெரிசித்து வந்துங்க
ளெல்லையைக்காததுக்கொண்டிருக்கிறேனையே. (உத்தாரந்)

வசனம்-நந்தனர் சிதம்பரம்போக உத்தரவு கேட்டதனால் வேதிய ரடிமையைப் பார்த்துச் சொல்லுகிறார்.

விருத்தம்.

படிபுகழ் தில்லை நாதன் பசதியே யுருவாய்வந்து
கடிநக ராதனாரில் சளிக்திடும் நந்த னென்று
சிடுசிடு மூஞ்சி காட்டிச் சிலவிடம் போலே நெஞ்சந்
துடிதுடித் திட வருாயந் தோசியும் பேசு வானே.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

சேரிமுற்றுஞ் சிவபசதி பண்ணும்படி
விட்டையா மடியிட்டையாம்
சேதிசொல்ல வேணுமென்றிங்கே நீ
வந்தையோ அகமகிழ்ந்தையோ
காலைமாலையில் வந்துதெரிசனந்
காட்டுறாய் நிலை நாட்டுறாய்
கதறினுலு மூர்க்குருளி சருடன்போ
லாகும்மா யதி வேகம்மா
அடிமைவேலை செய்யுமுனைக் கிந்தகொண்
டாட்டமோ ஜனக் கூட்டமோ
அடக்கியாள மாட்டேனே சிங்கக்குட்டி
யல்லவோ அதைச் சொல்லவோ
காளிபூசை யவர்போடும் போது நீ
கண்டித்தை யவரைத் தெண்டித்தை
கபடமெலாம் வெளிபபடிவ தாகவழி
காட்டுறே னிதை நாட்டுறேன்

வசனம்-நந்தனர்சிதம்பரம்போகிறேனென்றுசொல்வதால் அந்தணர்கண்டிக்கிறார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

பறையாசிதம்பரமென்றுசொல்லப்
படுமோடா போகப்படுமோடா-அடா (பறை)

அநுபல்லவி.

அறியாத்தனமினிசொன்னாலினிமே
லடிப்பேன் கூலியைப்பிடிப்பேனபாவிப் (பறை)

சரணங்கள்.

சிதம்பரமென்பதை-விடு சொல்லைச்
சேரடியிலேவந்து-படு நாத்தைப்
பதத்திற்பிடுங்கிநடு கறுப்
பண்ணனுக்கேபொலிகொடு-அடா (பறை)

எப்போதுமொருகடி பிடி-கையி
லெடுத்துக்கொண்டதமுக் கடி-உங்கள்
கற்பனையாய்ப்பள்ளூரு படி-காலிலோ
காமலேகாடியைக் குடி-அடா (பறை)

கள்ளந்திருதற்குப்பாரு-உன்
கால்படும்பண்ணையிலவீற் றிரு-இது
சொன்னதுமில்லையோ உன-குரு நீ
சுகமுடன் வாழ்ந்துக்கொண்டிரு-அடா (பறை)

விருத்தம்.

ஓகியடி வீரா வென்றும் உக்கிர மாடா வென்றும்
பதிபெறுன் கறுப்பா வென்றும் பாவாடை ராயா வென்றுந்
துதிபெரு மிநளா வென்றுந் தொட்டியச் சின்ன னென்றும்
மதுவெகுடு பிசிதம் வைத்து வருந்திமே வணங்கு வாயே.

வசனம்.

நந்தனரைக கண்டித்து மறுபடியும் நல்லவார்த்தை அந்தணர் சொல்லுகிறார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பல்லவி.

நந்தா-வொருசேதிசொல்லுகிறேன்கே
ளிந்த-பங்குனி தான்றிபகாள்முதல்
சொந்த-முறியெழுதிக்கொடுத்துநீ
வந்த-பறையனல்லவோமறந்தாய் (நந்தா)

பாரு-இந்தவயல்வரப்பைவெட்டிப்
பேரு-அந்தக்கண்ணியைவெட்டிப்பணை
சேரு-பொறுப்புள்ளவனுனையன்றி
யாரு-இதுவல்லவோகாரியம் (நந்தா)

வாடா-வன் கூலியைமுழுதுந்தா
வோடா-பண்ணைப்பறைச்சிகளுடனே
கூடா-பழனங்கடோறுமநடப்
போடா-யிதுவல்லவோபுண்ணியம் (நந்தா)

பாடு-உன்கறுப்பத்தைக்கொண்
டாடு-கள்ளுகள்ளுடன்பூசைகள்
போடு-நெல்விளையுமபடிக்குவழி
தேடு-புத்திசொன்னேனிதுதான் (நந்தா)

வசனம்

வேதியர் நந்தனரைச் சிதம்பரம்போகாதேயென்று கண்டித்துச்சொல்லுகிறார்.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போகாதே-சொன்னேன்
சிதம்பரம்போகாதே

அநுபல்லவி.

சிதம்பரம்போனால் ஹிதம்பெறலாமென்று
சேதிசொல்லவுமுன் சாதிக்கடுக்குமோ (சிதம்பர)

சரணங்கள்.

கள்ளகும்பிடுதனைப் போடாதே-உன்
கபடமெல்லாமிங்கே காட்டாதே
மெள்ளச்சொல்லடாமுழுமூடாகிழே
தள்ளிவிட்டுவுன்னைத் தகும்படிசெய்வேன் (சிதம்பர)

நாத்தைபிடுங்கிக்கண்ணிகட வேணும்-அந்த
நஞ்சைவயலைச்சற்றேயுழ வேணும்
பார்ததுபரம்படித்துப் பழுதுவாராமல்
பாயுஞ்சலம்விட்டுபபார்த்திடுவாய்நீ (சிதம்பர)

அடிக்கடிமறுத்துநான் சொல்லவேவா-நீ
அடிமைக்காரப்பய லல்லவோ
எடுத்துக்காட்டுவேனிருக்குதுசாதனம்
தடுத்துப்பேசினால் தாடையிலடிப்பேன் (சிதம்பர)

வசனம்

அந்தணர் கண்டித்துச் சொன்னதால் நந்தனார் துயரமடைந்து சேரியில்வந்து சிவனைநினைத்து பத்திபுரிந்து கொண்டாடுகிறார்.

இராகம்-தெண்டகம்-ரூபகதாளம்.

பல்லவி.

பத்திபண்ணிக்கொண்டிருந்தால் முத்திபெறலாமே.

அநுபல்லவி.

எத்திசையுமெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்நிறைந்திருக்கும்
வஸ்துவென்று அம்பலவன் மலரடிதினந்தோறும் (பத்தி)

சரணங்கள்.

கட்டழகிச்சாரனிடங் காதலது போலே
கடுகிவருங்கன்றுகில் கபிலையது போலே
கண்டவரைத்துணியுமில்லாப் பேதையொருக் காலே
காவலனார்பதம்வருகில் களிப்பதனைப் போலே
கண்டுமுறைகிழகலக் கண்டறியார்மதுமயக்கங்
கற்பனையாமிப்பிரபஞ்சஞ் சொற்பனம்போலொப்பிமிகும் ()

தாயடிக்கிற்பால்குடிக்கத் தழுதல்திருஷ் டாந்தம்
சடலம்பொறுக்காமல் துயாதருகிலு மேகாந்தம்
ஆயிருந்துவழுதகிலிந்த மாயையுப சாந்தம்
ஆதுமென்றுசாதனங்கள் வழங்குது வேதாந்தம்
காயஞ்சனிக்காதிருக்ககண்டுகொள்ளவேணு மென்றால்
காசுபணம்பாசமது மாசறவேநேசமுடன் (பத்தி)

பச்சைமரத்தாணிபோலே பரிந்துமனம் நாடி
பாலகிருஷ்ணன் பணியும்பொன்னம்பலவனைக்கொண்டாடி
இச்சைமொழி யும்புலன்களைந்துமிக வாடி
ஏகாந்தமானபரி பூரணத்தைத் தேடி
அச்சமறத்திருவிழியி லானந்தநீர்க்கரைபுரள
அரனேதிரிபுரனேகங்காதரனேபராபரனேயென்று (பத்தி)

வசனம்,

சேரியில் சிவபத்திபண்ணிக்கொண்டிருக்கின்ற பன்னிருபேர்களுடன் நந்தனுநுமிருந்து பத்திபண்ணுநாளையில் ஒருநாள்நந்தனார் பன்னிருவருடைய பத்திதிடப்பட்டதோ இல்லையோவென்று அறியப் பரிட்சைபார்த்தார்.

இருச்சொல் அலங்காரம்.

நந்தனர். சிவதலத்திற் சிதம்பரமேகாட்சி யென்றார்
அவர்கள் அவித்தைகளைத் தூண்டிநிற்றலேகாட்சி யென்றார்
நந்தனர். சிற்சபையின்மகிமையென்ன செப்புவீ ரென்றார்
அவர்கள். அச்சுதனுங்காணுத வானந்த மென்றார்
நந்தனர். ஆக்கையினலென்ன பலனது மென்றார்
அவர்கள் நாக்கததினலேசிவ நாமம்நவிலு மென்றார்
நந்தனர். கற்றதனலென்ன பலனகண்டா ரென்றார்
அவர்கள். கொற்றடிமைக்கார பலன்கொண்டா ரென்றார்
நந்தனர் அம்பலத்தைதிரைபோடத் தொடங்கினரே
அவர்கள். பம்புவித்தை மாயைக்கு ளடங்கினரே
நந்தனர். மனந்திருத்திக்கொண்டார்க்குவாரதொன்றில்லைஎன்றார்
அவர்கள். கனவருதமுண்டார்க்குங் காராதுதொல்லை யென்றார்
நந்தனர். சாதியிலேயெளியன் தானறிவேனே வென்றார்
அவர்கள். ஆதியிலேபேதமில்லை அறிவீரே யென்றார்
நந்தனர். ஞானமில்லாதவன் முத்திநாடா ரென்றார்

அவர்கள். ஊனமில்லாசிவபத்திதேடா ரென்றார்
நந்தனார். மதியில்லாதவர்க்கெல்லாம் விதியே தென்றார்
அவர்கள். துதியில்லாதவர்க்கெல்லாம் சதியே ரென்றார்
நந்தனார். பவக்கடலுக்குளப்படிபோல் பருப்பா ரென்றார்
அவர்கள். சுகக்கடலிலேப்பாறிச் சுகிப்பாரே யென்றார்
நந்தனார் பாப்பானுத்தாரங் கொடுப்பாரோ வென்றார்
அவர்கள். காப்பாற்றுங்கடவுளுக் கைப்பார மென்றார்
நந்தனார். படித்தபடிகாட்டிவிட்டேன் பலமாச்ச தென்றார்
அவர்கள். அடித்துப்பால் போட்டுவிட்டீராராலே யென்றார்
நந்தனார். அங்கேயேன்நீங்கள் வல்லீயோ வென்றார்
அவர்கள். இங்கேயென்று இல்லையோ வென்றார்
நந்தனார். எங்கும்நிறைந்த பூரணங்க ளென்றார்
அவர்கள். இங்குமிருந்து வியற்றுங்கா ணென்றார்

வசனம்.

நந்தனார் சிலநாளானபின்பு அடிமைகொண்ட ஆந்தணரிடத்தில்வந்து சிதம்பரம்போக வுத்தாரமிகவும் வருந்திக்கேட்கிறார்.

இராகம்-கெவுளிபந்து-ரூபகதாளம்.

பல்லவி.

குஞ்சிதபாதத்தைத்தாரும்-எந்தன்-சஞ்சிதபாவத்தைத்தீரும்.

அநுபல்லவி.

செஞ்சிலம்பசையுங் கனகசபைதனில்
ஜெணுதத்தஜ்ஜெணுதகஜெணுகிமிதத்தோமென்றாடிய(குஞ்)

சரணங்கள்.

நெஞ்சக்கவலையை யாத்தும்-இந்த
வஞ்சப்பிரவிவை மாத்தும்-நாளும்
வஞ்சசிவகாமி வல்லிமகிழ்ந்திடும்
தஜ்ஜெம்தஜ்ஜெம்தரிகிட தக்கிடதோமென்றாடிய(குஞ்)

சரணமென்றிங்கேநான் வந்தேன்-ஜென்ம
மாணத்தில்நான்மிக நொந்தேன்-அந்தக்
கருணைகருஷங்கள் போக்கியேகாத்திடும்
இந்திரானவர்மாமுனி வந்துநிதந்துதிசெய்திடும்(குஞ்)

பாலகிருஷ்ணன்தொழும் பாதா-முத்தி
நால்வருக்குதவிய நாதா-எந்தன்
மேலேகிர்பைசெய்து வெத்தியளித்திடும்
அத்தனைநித்தனைசுந்தனைகத்தனை நிர்த்தனஞ்செய்திடும்(குஞ்)

விருத்தம்.

வேதியரேபெரியவரேநல்லவரேநான்கடையன்விண்ணோர்மெச்சும்
சாதியரேபலகலையுங்கற்றுணர்ந்துபுரையில்லாத்தவமேசெய்யும்
போதியரேபத்தியில்லாதான்புலையனேதறிவேன்புண்ணியமூர்த்தி
ஆதிதிருசிதம்பரத்தைகாணவென்றேஆசைகொண்டேனனுப்புவீரே.

இராகம்-நாதநாமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

தில்லைச்சிதம்பரத்தை யொருதரமாகிலுந்
தெரிசித்துவாவென் றுத்தாரந்தாருமையே

தில்லைச்சிதம்பரத்தைக் கண்டால்பிறவிப்பிணி
இல்லையென்றுபெரியோர் சொல்லக்கேட்டிருக்கிறேன் (தில்லை)

அல்லலறுக்குந்திரு வம்பலநாயகன்
அல்லும்பகலுநாடு மானந்தம்பெருகிய (தில்லை)

ஆதிமுதலாயென்னை அடிமைகொண்டதல்லவோ
வேதகுலமேயென்றன் மீதில்தயவுசெய்து (தில்லை)

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தெரிசிக்கவேணுஞ் சிதம்பரத்தைத் தெரிசிக்கவேணும்

அநுபல்லவி.

தெரிசித்தவுடனுடல் கரிசைப்பிணிகளறும்
பரிசுத்தமாகுமுன் மறுசுத்தமாறவே (தெரிசிக்)

வேதனையடியவர் போதனைமுனிவர்கள்
நாதனைக்கரங்குவித் தாதரவாக (தெரிசிக்)

ஈசனைபுலியூரில் வாசனைகனகச
பேசனைனறு நடராஜனைப்போற்றி (தெரிசிக்)

காமத்தையகல்பவர் வாமத்தினின்றுசிவ
நாமத்தைச்சொல்லியர்த்த சாமத்தில்வந்து (தெரிசிக்)

ஞாலம்புகழுமவன் மாலையணியுங்கோ
பாலகிருஷ்ணன்தொழுஞ் சீலபொற்பாதத்தைத் (தெரிசிக்)

வசனம்.

நந்தனர் தெரிசனஞ்செய்ய உத்தாரங்கேட்க அந்தணர்சொல்லுகிறார்.

### விருத்தம்

புத்திசொல்லிக்கேளாத மூடாவுன்றன்
புரட்டெல்லாம்நானறிவேன் போடாபோடா
பத்தியென்றுஞ்சித்தியென்றும் பறையர்க்கேது
பார்ப்பாரதெய்வமது பாலிக்காது
குற்றமுண்டுன்சாதியிலே வழக்கமில்லாக்
கொள்கையது சேரியிலே கூடாதப்பா
பித்தமது கொண்டவன்போலிங்கேவந்து
பேசாதே போபோவென்றேசுவானே

### இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

### பல்லவி.

சிதம்பரதெரிசனமா நீஅதை சிந்திக்கலாமாபறையா

### அநுபல்லவி.

சிதம்பரதெரிசனஞ் சதுர்மறையோர்கள்
செய்வதுஞாயம் நீசொல்வதுமாயம்
சொல்லாதே இங்கே நில்லாதே
சேரிக்குப்போடா நாளைக்குவாடா (சிதம்ப)

### சரணங்கள்.

கனகமகாமுனி யோகிகள்தேடிய
கனகசபேசனைக் கண்டறிவாயோ
பேசாதே கை வீசாதே
வீரனைத்தொழுடா ஏரியையுழுடா
தவமுடையோர்கள் தரிக்குமந்திரஞ்
சிவபதமென்று சேவிக்கலாமா
ஆகாது வினை போகாது
விரைதெளியன்றோ அறுதலிமகனே (சிதம்பரம்)

### வசனம்.

உழுது சேறுபண்ணி பரம்படித்து விரைதெளித்து நாத்துப் பறித்து நடவுநட்டு மடைதிறந்து மடைகோலி களைபிடுங்கிக்காத்திருந்து இராக்காலங்களில் பந்தம்பிடித்து கடியெடுத்து கொம்புதப்பட்டமுழக்கி கோலாகலமாகி நாலுபறையரோடுங்கூடி வரப்பைவிட்டு ஊரைச்சுற்றிவந்து காக்கும்படி கிராமத்தாரிட்ட காவல்காப்பதுமில்லை உனகதுவேண்டிய ஊணுறக்கமுதலாகிய தேசதருமம் மறந்து எப்போதும் தில்லையம்பலம் திருச்சிற்றம்பலம் சிதம்பரமென்று

பித்துப்பிடித்துத் தாய்விட்டகுழந்தைபோலவாய்விட்டலறிப்பேய் பிடித்தவன்போல மதிமயங்கி வுடல்கலங்கி எல்லோருமபழிக்கக் கீழ்புரண்டழுது தத்துப்பித்தென்று தள்ளாடிய காரணமென்ன வென்று அந்தணர் நந்தனைக்கேட்கிறார்.

இராகம்-சூரியகாந்தம்-ஆதிதாளம்.

பல்லவி

நந்தாவுனக்கிந்தபிர்மை வந்தகாரணம் நானறிந்திடச்சொல்லும்

அநுபல்லவி.

அந்தரங்கமுள்ள சொந்தப்பறையனு
யன்றியிருப்பதுபோய் சண்டைபிடிக்கவந்தாய்

சரணங்கள்

சாதிமுறைமை துறந்தாய்-தில்லை
சபாபதியை நினைந்தாய்
சூதுகாரப்புறையருடன்கூடிச்
சும்மாயிருப்பது எம்மாத்திரம் (நந்தா)

குலத்திலில்லாத வழக்கம்-நீயதைக்
கொண்டாடுகிற முழக்கம்
வெளுத்ததினுலென்ன எருமைச்சாணியது
மேனியிலணிவாரோ வையகந்தன்னில் (நந்தா)

திருட்டுப்புரட்டு மறிவாய்-பொல்லாத்
தீங்குவார்த்தை யுரையாய்
முரட்டுதனத்தையென் முன்னேகாட்டி
விரட்டிப்பேசுருய் வெறிமயக்கமோ அடா (நந்தா)

வசனம்

வேதியர் நநதனைப்பார்த்துச் சிதம்பரப் பிரம்மைவந்த காரணமென்னவென்று கேட்டபின் நந்தனர் வேதியருக்குச் சொல்லுவார்

விருத்தம்.

மனங்கண்ட் விடமெல்லார் போகாம லாணையிட்டு மறித்து வாங்கி, அனல்கண்ட மெழுகது போ லென துள்ளங் தனதாக வருகிச்சாய்க்கும், புனலகொண்ட வேணியனைப் புண்ணியனைப் புராந்தகனைப் போற்றிசெய்யக், கனங்கொண்ட திலலைநகர் போய்வருவேன்கருணைவழி காட்டுவீரே.

விருத்தம்.

புத்திசொல்லிக்கேளாத மூடாவுன்றன்
   புரட்டெல்லாம்நானறிவேன் போடாபோடா
பத்தியென்றுஞ்சித்தியென்றும் பறையர்க்கேது
   பார்ப்பாரதெய்வமது பாலிக்காது
குற்றமுண்டுன்சாதியிலே வழக்கமில்லாக்
   கொள்கையது சேரியிலே கூடாதப்பா
பித்தமது கொண்டவன்போ லிங்கேவந்து
   பேசாதே போபோவென் றேசுவானே

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்

பல்லவி.

சிதம்பரதெரிசனமா நீஅதை சிந்திக்கலாமாபறையா

அநுபல்லவி.

சிதம்பரதெரிசனஞ் சதுர்மறையோர்கள்
   செய்வதுஞாயம் நீசொல்வதுமாயம்
சொல்லாதே இங்கே நில்லாதே
   சேரிக்குப்போடா நாளைக்குவாடா (சிதம்ப)

சரணங்கள்.

கனகமகாமுனி யோகிகள்தேடிய
   கனகசபேசனைக் கண்டறிவாயோ
பேசாதே கை வீசாதே
   வீரனைத்தொழுடா ஏரியையுழுடா
தவமுடையோர்கள் தரிக்குமந்திரஞ்
   சிவபதமென்று சேவிக்கலாமா
ஆகாது வினை போகாது
   விரைதெளியன்றோ அறுதலிமகனே (சிதம்பரம்)

வசனம்.

உழுது சேறுபண்ணி பரம்படித்து விரைதெளித்து காத்துப் பரித்து நடவுநட்டு மடைதிறந்து மடைகோலி களைபிடுங்கிக்காத்திருந்து இராக்காலங்களில் பந்தம்பிடித்து கடியெடுத்து கொம்புதப் பட்டமுழக்கி கோலாகலமாகி நாலுபறையரோடுங்கூடி வரப்பைவிட்டு வரைச்சுற்றிவந்து காக்கும்படி கிராமத்தாரிட்ட காவல்காப்பதல்லே உனக்குவேண்டிய வனுஷ்டானமுதலாகிய தேசதருமமறந்து எப்போதும் தில்லையம்பலம் திருச்சிற்றம்பலம் சிதம்பரமென்று

பித்துப்பிடித்துத் தாய்விட்டகுழந்தைபோலவாய்விட்டலறிப்பேய் பிடித்தவன்போல மதிமயங்கி வுடல்கலங்கி எல்லோருமபழிக்கக் கீழேபுரண்டழுது தத்துப்பித்தென்று தள்ளாடிய காரணமென்ன வென்று அந்தணர் நந்தனைக்கேட்கிறார்.

இராகம்-சூரியகாந்தம்-ஆதிதாளம்.

பல்லவி

நந்தாவுனக்கிந்தபிர்மை வந்தகாரணம் நானறிந்திடச்சொல்லும்

அநுபல்லவி.

அந்தரங்கமுள்ள சொந்தப்பறையனு
யன்றியிருப்பதுபோய் சண்டைபிடிக்கவந்தாய்

சரணங்கள்

சாதிமுறைமை துறந்தாய்-தில்லை
சபாபதியை நினைந்தாய்
சூதுகாரப்புறையருடன்கூடிச்
சும்மாயிருப்பது எம்மாத்திரம் (நந்தா)

குலத்திலில்லாத வழக்கம்-நீயதைக்
கொண்டாடுகிற முழக்கம்
வெளுத்ததினாலென்ன எருமைச்சாணியது
மேனியிலணிவாரோ வையகந்தன்னில் (நந்தா)

திருட்டுப்புரட்டு மறிவாய்-பொல்லாத்
தீங்குவார்த்தை யுரையாய்
முரட்டுதனத்தையென் முன்னேகாட்டி
விரட்டிப்பேசுறாய் வெறிமயக்கமோ அடா (நந்தா)

வசனம்

வேதியர் நநதனைப்பார்த்துச் சிதம்பரப் பிரம்மைவந்த காரணமென்னவென்று கேட்டபின் நந்தனார் வேதியருக்குச் சொல்லுவார்

விருத்தம்.

மனங்கண்ட விடமெல்லாம் போகாம லாணையிட்டு மறித்து வாங்கி, அனல்கண்ட மெழுகதுபோ லெனதுள்ளந் தனதாக வருகிச்சாய்க்கும், புனலகொண்ட வேணியனைப் புண்ணியனைப் புராந்தகனைப் போற்றிசெய்யக், கனங்கொண்ட தில்லைநகர் போய்வருவேன்கருணைவழி காட்டுவீரே.

வசனம்.

நந்தனர் வேதியரைப்பார்த்து உத்தாரங்கேட்க அந்தணர் சொல்லுகின்றார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

நட்டநடவுவினையும்பொட்டவெளியைத்தொட்டபோதிலும் (நட்)
கெட்டமதியைவிட்டுவிட்டுக்கேளடாபண்ணையாளடா (நட்)
கிட்டநெருங்கும்பண்ணையுன்கால்பட்டதினல்பசுமைகொண்டு(நட்)

விருத்தம்.

கதிரொருமுழமேநீளுங் கட்டுமுக்கலமேகாணுந்
துதிபெறுநந்தாவுன்கை தொட்டதேதங்கமாகும்
பதிதனிற்பெருமைசொல்லும் பறையனுயிருந்துதில்லைச்
சிதம்பரப்பித்தேன்கொண்டாய் செய்தொழிலேதென்றாரே.

வசனம்.

நந்தனருக்குச் சிதம்பரப்பித்து தெளியாமையால் வேதியர் என்னசெய்யப் போகிறேனென்று துயரமுற்று நந்தனரைப் பார்த்துப்புலம்புவார்.

இராகம்- தனாசரி- ஆதிதாளம்.

பல்லவி.

பித்தனாய்ப்போனதென்ன-நந்தா
பித்தனாய்ப்போனதென்ன

அநுபல்லவி.

எத்தனையோபுத்திகளெடுத்துப்படித்துப் (பித்தனா)

சரணங்கள்.

சித்தமிப்படி செய்ததாரோ
பத்துதலில்லாமலே பண்ணியபேராரோ
பத்தியென்றுபே ரிட்டதாரோ
நித்தமுமிப்படியே நிலையிட்டதாரோ (பித்த)

எத்திசையும்புகழ்பெற் றிருந்தும்
வித்தைகளனேகம்விளம்பத் தெரிந்தும்
பத்தியோடுசால மறிந்துங்
கத்தனென்றுபேரிட்டுகானுனக் கிருந்தும் (பித்த)

வசனம்

மனதிற் றுயரமுற்றவேதியரை நந்தனர் மிகவும் வணங்கிச் சொல்லுவார்.

விருத்தம்.

பித்தமதுதெளிந்துவிடமருந்துண்டு தில்லைவனம்பேணிச்சென்று
சத்திசிவகாமிப்பெண் சந்நிதியினேராகித்தலைவணங்கி
தித்தியென்றுநடனமிடுந்திருக்கோலங்கண் குளிரத்தெரிசித்தால்
பித்தமதுதெளிந்துவிடும்வேதாநதமழைசொரியும்பெரியகோவே.

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

பித்தந்தெளிய மருந்தொன்றிருக்குது
பேரின்பமன்றுள்ளே

அநுபல்லவி.

மற்றமருந்துகள் தின்றாலுமுள்ளுக்கு
வல்லேவல்லேஐயே அடிமை (பித்தந்தெளிய)

சரணங்கள்

பாம்பும்புலியுமெய்ப் பாடுபட்டுத்தேடிப்
பார்த்துப்பயிரிட்டது
பாரளந்ததிருமாயனும்வேதனும்
பார்த்துக்களித்ததுண்டு
பார்ப்பதியென்றொருசிமாட்டியதில்
பாதியைத்தின்றதுண்டு-இன்னம்
பாதியிருக்குபறையாநீயும்போய்ப்
பாரென்றுத்தாரந்தாரும் (பித்தந்தெளிய)

பத்துத்திசையும் பரவிப்படர்ந்தாலும்
பார்த்துப்பிடியாரே
தத்திக்குதிக்குந் தாளங்கள்போடும்
தண்டைச்சிலம்புகொஞ்சுந்
தித்திக்குந்தேனோ செங்கரும்போநல்ல
சித்தமுடையார்க்கே
சித்தத்தைக்கட்டி யிழுக்குது அங்கே
சென்றால்போதுங்கண்டால்தீரும் (பித்தந்தெளிய)

னரைச்சொன்னாலுமிப்பாவத்துலையு
மூழ்வினையூடறுக்கும்
பேரைக்கொண்டாடிப் புலம்புகிறார்வெகு
பேர்களுக்குப்பிழைப்பு
சாருநரைதிரை தீருமருந்துச்
சாதியைப்பாராது-இன்னந்
தீராதநோய்கள் படைத்தவெனக்குத்
திருநதிருமைமேய அடிமை (பித்தந்தெளிய)

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போகாம விருப்பேனோ
சென்மத்தைவீணாக்கி கெடுப்பேனோ (சிதம்பரம்)

பத்தியுமனமும் பொருந்தினதங்கே
சத்தியஞ்சொன்னேன் சடலமுமிங்கே (சிதம்பரம்)

ஆசையும்நேசமு மானந்தமங்கே
பேசலும்பாசமும் பிதற்றலுமங்கே (சிதம்பரம்)

வசனம்

இப்படி நந்தனார்சொல்ல வேதியர் மூர்ச்சையடைந்து விழுந்து தெளிந்து எழுந்துசொல்வார்

விருத்தம்

நாற்பதுவேலிபூமி நடவுநட்டாகவில்லை
பார்ப்பதுமில்லைசைவப் பழமதுதின்றாய்பண்ணை
காப்பதுமில்லையுன்னைக் கைவிடமனதுவல்லை
சேர்ப்பதாலாவதில்லைச் சேரியிற்றொலைந்துபோடா.

வசனம்.

என்று வேதியன்சொல்லிய உத்தாரப்படி சேரியில் நந்தனார் வந்து பத்திபுரியும் பன்னிரண்டுபேர்களைப்பார்த்துச் சொல்லுவார்.

திபதை-இராகம்-மாஞ்சை-ஆதிதாளம்.

கண்ணிகள்

ஆசைநேசராகுந் தோழரேகேளுங்கள்
பேசுந்தெய்வங்களுண்டோ யீசனல்லால்நமக்கு (ஆசை)

ஆயன்மாயன் அறைறடிமுடிகாணாத
நேயனழலுருவாய் நின்றநிர்மலனல்லால் (ஆசை)

மண்ணுய்விண்ணுய் மற்றுள்ளப்பொருள்களாய்
எண்ணுமுள்ளெண்ணெய்போலிருக்குமீசனல்லாமல் (ஆசை)

அருவாயுருவா யண்டபகிரண்டமெங்கும்
பாரமாய்நின்றதந்தப் பராபரத்தையல்லாமல் (ஆசை)

வசனம்.

என்று நந்தனர்சொல்லிப் பின்னும் ஆனந்தக்கூத்தாடுவார்.

இராகம்-தன்னியாசி-திரிபுடைதாளம்

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடினர் ஆனந்தநந்தன்
ஆனந்தக்கூத்தாடினர்

அநுபல்லவி.

வானுந்துதிதேவர் முனிவரர்ஜயஜய வென்று
வாழ்த்தும்பிரானடிகள் வாய்ப்பதெப்போதோவென்று (ஆநந்)

சரணங்கள்.

மாயவலேக்குட் பட்டு-அதிலெப்போதும்
மாளாத்துயரப் பட்டு
மாயுமுன்னுகவந்து வலியவாண்டருண்மூர்த்தி
நாயேன்களிக்கவென்முன் ருடுவரென்றேசாத்தி (ஆநந்)

கவலைப்படாத நெஞ்சமே-காலன்கைப்பாசங்
கண்முன்வராதே அஞ்சுமே
தவநிலையையுணர்ந்த சன்மார்க்கர்தமக்கன்று
தற்பதத்தைகாட்டினேன் தனைக்காணுவேனுனென்று (ஆநந்)

காயமிதுவுஞ் சதமா-அன்றியுற்பவம்
காண்பதேஒரு விதமா
ஆயுமெழுபிறப்பா யவதரித்தாலுண்டென்றும்
தூயபதத்தாலந்தத் துகளற்றிருப்பேனென்றும் (ஆநந்)

வசனம்.

இவ்விதமாகப் பனிரெண்டுபேர்களேயும் வேலைசெய்ய வொட்டாமல் தன்சமீபத்தில் நிற்கவைத்துக்கொண்டு போதித்திருப்பதை வேதியன் கேள்வியுற்று நந்தனரைச்சீறி கடுங்கோபஞ்செய்ய நந்தனர் வேதியருக்கு இதவுசொல்லுகிறார்.

ஸ்ரீராகம்- ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுக்கென்மீது இத்தனைபேதகம்
எண்ணுவனோ தோதகம்

அநுபல்லவி.

காதகராமனக்கசடர்சொன்ன சொல்லை
சாதனைசெய்துசாதித்திர்பிழையொன் றில்லை (ஏதுக்)

சரணங்கள்.

நான்உமக்குப் பண்டு-சாசனம்செய்து
சலமாய்த்தந்த துண்டு
தோன்றலேநீசொல்லுஞ் சொற்படிசெய்கிறேன்
பான்மையாகநித்தம் பத்தியாய்உய்கிறேன் (ஏதுக்)

காசளவு நன்மை-செய்தோரையொருக்
காலும்மறவாத் தன்மை
தாசனுக்கெப்போதுமுண்டுதாமே கண்டு
யோசிக்கப்போகிறீரினிமேல்நான்செய்தொண்டு (ஏதுக்)

ஏழைநான் தானே-சூதுவாதும்
ஏதொன்றறி யேனே
மேழியுடனேயொருமேதிநாளைக ளங்கே
ஊழியனுக்கும்உழுகவிறுங்கொடுப்பீ ரிங்கே (ஏதுக்)

நந்தனார்ஏருழுதல் விருத்தம்.

வணக்கமாய்ச்சொல்லும் வார்த்தையையுணர்ந்து
வஞ்சனையிலாத வேதியன்றன்
கணக்கில்லாத்தனது பண்ணையாள்வசத்திற்
கைப்பிடியாகவே தந்து
பிணக்கிலானிவன்சொற் படியெலாஞ்செய்வான்
பின்னிடான்அழைத்துப் போவென்ன
இணக்கமாய்க்கொண்டு போயினர்நந்தன்
ஏர்த்தொழில்மிகப் புரிந்தனனே.

இராகப்-சஹானா-ரூபகதாளம்.

பல்லவி.

பத்தியாக ஆண்டைசொற்படி செய்தானந்தன்
பலருடன்கூடிமிகப் (பத்தி)

அநுபல்லவி

கத்தனைச்சித்தங்களித்துக் கதித்தவன்
கமலபாதத்தை நாடி
காதலாகவேகொண் டாடி
மனம் நீடி (பத்தி)

சரணங்கள்

நீருள்ள ஆதனூர்நஞ்சை புஞ்சைகளை
நித்தமும்மேற்கொண்டு பழுது அறச்
சுத்தமாகவே யுழுது
காலைப் பொழுது (பத்தி)

கறுப்புவெளுப்புசிவப்பு நிறமுள்ளக்
காளைகளைகட்டிப் பூட்டி பொற்
காறுவொன்றதிலே மாட்டி
ஏ ரோட்டி (பத்தி)

கந்தன்கறுப்பன்கடம்ப னிடும்பன்
கரியவனவன் தம்பி பெரியவன் சின்னக்
காத்தானவன்மகன் சொரியன்
குள்ள கரியன் (பத்தி)

சீரகச்சம்பாசிறுகருடன் சம்பா
சிறந்தமணக்கத்தை நட்டு கம்பு
சேரதுவரையு மிட்டு
பயி ரிட்டு (பத்தி)

வசனம்.

இவ்விதமாய் ஏர்த்தொழில் புரிந்துக்கொண்டிருந்த நந்தனார் இனிமேல் சிதம்பரம் போவேன் போகாவிடில் பிராணனை விடுவேன் அன்றியும் சேரியில் வரமாட்டேனென்று சொல்லிக்கொண்டு வேதியர்பால்சென்று தலைவணங்கிக் கரங்குவித்து மனந்துடித்துக் கண்டித்துச் சிதம்பரம்போக உத்தாரங்கேட்கிறார்.

விருத்தம்.

பொய்ச்சடலம் புழுக்கூடோன் பதுவாசற் றேற்பையைப்
போற்றிசெய்யும்
துச்சனிவனென்றெண்ணித் தள்ளாமல்நன்னெறியைச்
சொல்லவேணும்
பச்சைமிகுந்தொடியழகி சிவகாமிமாதுபங்கன்
பாதங்காண
இச்சைமிகுந்திருக்குதையே அம்பலத்தைகண்டுகளித்
திறைஞ்சுவேனே.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

பல்லவி.

பொன்னம்பலவாண னடிதொழுவா-ரொருவான்றிப்
பிறவிக்கடலிடையில் கிடந்தழுவார்

அநுபல்லவி

இன்னம்பலதெய்வங்களு மிருக்குதெனக்கிவர்போலவே
யில்லைதயவில்லைஎமையிடத்தி லிருந்தருள்செய்திடும் (பொ)

சரணங்கள்.

வேதமொருநான்குமறியாதபழம்பொருளாகினும்
வேண்டும்பதஞ்சலிக்காகவேதில்லைப்பதிவாது
பாதச்சிலம்பசையமணிகுலுங்கப்பிறையிலங்க
பணிபடமாடவேசடையாடவேபரமானந்தக்கூத்தாடிய (பொ)

உலகந்தனில்ககனமதுபோலெங்கும்பரிபூரண
முருவற்றதுகுறையற்றிடுஞ்செல்வங்
கலியற்றவர்மதமற்றவர்விடையத்தினிலுருவற்றிட
கலைகற்றவர்வலையக்கவரிதையத்தினில்நடனமாடிய (பொ)

இரவுபகல்கருமங்களிழுக்கும்பொரிகணங்களிதை
இழுத்துவசப்படுத்தும்வகையெனக்குத்தெரியாது
பரவிவரும்ராகாதிற்சரமடங்கிமனதொடிங்கிவழி
பார்க்குமிடமார்க்குமரிதாக்கும்பாலகிருஷ்ணன்தொழும் ()

வசனம்.

இவ்வகையாய்ச்சொல்லும் நந்தனரைப்பார்த்து வேதியர்சொல்லுகிறார்.

சுலோகம்.

மெள்ளப்பேசிமெழுகிறுய னுதினமூடாவுனக்கிதனை
கள்ளக்கும்பிடாலாவதென்னபலம்நகாட்டுப்பசாசல்லவோ
துள்ளித்துள்ளிதுடிக்கிறுய்சிவபதஞ்செல்லாதுன்சாதியில்
எள்ளுக்கொல்லையில்மாடுவந்தொடாராதேகும்படிச்செல்லடா:

வசனம்

இப்படிச்சொல்லிய வேதியருடனே நந்தனர் தனக்குத் தெரிந்தவித்தைகளை அ கருணத்தில் சொல்லிக்காட்டுவார்.

முன் நந்தனர் பின்வேதியர் இருவருமாகச் சொல்லிக்கொள்ளும்

ஏட்டிக்குப் போட்டியான
## இருச்சொல் அலங்காரம்.

நந்தனார். தில்லையைப்பார்க்க வல்லையோ வென்றார்
வேதியர். கொல்லையில்முளகாயில்லையோ வென்றார்
நந்தனார். கள்ளம்போனுலுள்ள துகாணு மென்றார்
வேதியர். வெள்ளம்போனுலுள்ள துவிளையு மென்றார்
நந்தனார் திருச்சிற்றம்பலங்கண்டால்தேகங்களிருக்கு மென்றார்
வேதியர். பொரிச்சகுழம்புகொண்டால்தேகம்பொருக்கு மென்றார்
நந்தனார். அரகராவென்றால் பாவம்போ மென்றா
வேதியர். பறையரைக்கண்டால்பாவமா மென்றார்
நந்தனார். வெட்டவெளியிலே மனமுட்டப்பாரு மென்றார்
வேதியர். பொட்டவெளியிலே குழிவெட்டிப்பாரு மென்றார்
நந்தனார். எனக்குஞூறியஞானமாரியைமதி யென்றார்
வேதியர். உனக்குநாறியைபறையர்சேரியேகதி யென்றார்
நந்தனார். கத்தாவேயென்னுள்ளம்பெற்று ரென்றார்
வேதியர். கத்தாழையக்கினியில்பற்று தென்றார்
நந்தனார். மறையோருக்கெப்போதும் வாயிலேதர்க்க மென்றார்
வேதியர். பறையோருக்கெப்போதும் சேரியேசொர்க்க மென்றார்
நந்தனார். கொள்ளித்தேள்போலென்னைக்கொட்டாதே யென்றார்
வேதியர் அள்ளித்தந்தேனென்னைத்திட்டாதே யென்றார்
நந்தனார். கடுமையாயமர்ந்துகவலைப்படுத்துவதே னென்றார்
வேதியர். அடுமையாய்வந்து அவலப்படுத்துவதே னென்றார்
நந்தனார். தில்லையோடுன்னைச் சேரேனோ வென்றார்
வேதியர். எல்லையோடுன்னைப் பாரேனோ வென்றார்
நந்தனார். திருவாதிரைவருகுதுபோவேனே யென்றார்
வேதியர். மருவாதிருபறையாபோகாதே யென்றார்
நந்தனார். தெரியாதேமெள்ளப்போவேனே யென்றார்
வேதியர். மரியாதையல்லப் போகாதே யென்றார்
நந்தனார். ஆணையைவிட்டுவழிகாட்டுப்பெரியோரே யென்றார்
வேதியர். பிராணியைவெட்டும்பழிகாட்டும்புலையரே யென்றார்
நந்தனார். ஆடிப்பர்டிப்படிப்பே னென்றார்
வேதியர். தேடித்தேடிபிடிப்பே னென்றார்
நந்தனார். தில்லையிலேகலங்காமல்நாடுவே னென்றார்
வேதியர். கொல்லையிலேவிலங்காகப் போடுவே னென்றார்
நந்தனார். சிந்தைநொந்து தவிப்பேனே யென்றார்

வேதியர். வந்துவந்து அலப்பதே யென்றார்
நந்தனார். நெஞ்சினுலெனெஞ்சமுருகாதோ வென்றார்
வேதியர். அஞ்சினுல்பஞ்சம்வருகாதோ வென்றார்
நந்தனார். சிதம்பரம்போக வுத்தாரந்தாரு மென்றார்
வேதியர். இதுபெறலாமோ சுகதாம்தப்பாது மென்றார்
நந்தனார் சீக்கிரமாய்ப்போவே னென்றார்
வேதியர். போக்கிரியாய்ப்போவா யென்றார்
நந்தனார். அன்னீதஞ்செய்யே னென்றார்
வேதியர். சொன்னது தவறே னென்றார்
நந்தனார். எங்கள்சாதிக்குஎன்னவழி யென்றார்
வேதியர். உங்கள்சாதிக்குஇந்தவழி யென்றார்
நந்தனார். உற்றதுஒது மென்றார்
வேதியர் பெற்றதுபோது மென்றார்
நந்தனார். பறையனாய்ப்பிறந்ததேன் தலையெழுத்திது வென்றார்
வேதியர். பறையனாய்ப்பிறந்துங்கள் வருத்தமது வென்றார்
நந்தனார். வாய்க்காதவெனக்கு வழிசொல்லு வீரே
வேதியர். காய்க்காதமரத்தில் கல்லெறி யாரே
நந்தனார். எப்போதுமிப்படிச்செய்தத னென்றார்
வேதியர். அப்போதுமிப்படிச் செய்ததே னென்றார்
நந்தனார். உலகமனைத்துங் கடவுளாய்நிறைந்ததே னென்றார்
வேதியர். பலகலைற்றும் பறையனாய்ப்பிறந்தே னென்றார்
நந்தனார். பழுதானசென்மம் படைத்ததேனே யென்றார்
வேதியர் அழுதாலுன்கன்மமடுக்காதோ வென்றார்
நந்தனார் காப்பதுன்பாரம் கட்டிவிடு மென்றார்
வேதியர் நாற்பதுவேலியை நட்டுவிடு மென்றார்
நந்தனார் அப்பன்கருணை யிப்படியோ வென்றார்
வேதியர். தப்பினேனதுவு மொப்பிலே னென்றார்

வசனம்

இப்போது நந்தனார் மெத்தவும் ஐயரைவணங்கி உத்திரவுகேட்கிறார்.

விருத்தம்

அல்லெனுங்குழலாள்மோக வாண்டதுவெருக்காற்றெண்டர்
பல்லூழிகாலஞ்செய்த பழவினைதலைதொடக்கறுத்துச்
சொல்லினுமடங்கொணுதச் சுகக்கடலாட்டிவைக்குந்
தில்லைநாயகனைக்கண்டு தெரிசனஞ்செய்வேனென்றார்.

இராகம்-பியாகு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

மார்கழிமாதந்திருவாதிரைநாள் வரப்போகுதையே[யே
மனதைப்புண்ணாகப்பண்ணவல்லொருதரம் போய்வாவென்றுசொல்லே
கட்டையிருக்கையிலசிதம்பரம்போய்நான் காணவேணுமையே
கசடனாகிலுமாசைவிளையுதுன்ன காலுக்குநம்பிடையே
காலனுமுளாகதநாள்முதலாயுமக் கடுமைக்காரனையே
காலபாசத்திற்காட்டிக்கொடாமற் காப்பாற்றிடுமையே
உள்ளக்காலிலவெள்ளனாடபாட லோடியுழைத்தேனையே
உண்டதுமுறங்கினதன்றியில்வேறே யொன்றுங்காணிலேயே
எட்டுமிரண்டுமறியாதம்பதை யெளியேனுனையே
இன்னந்தாய்வயிற்றிடையனுமாம விடங்காட்டிடுமையே
வெள்ளைவெளுத்திடந்தண்ணீர் குடித்திடும் வெறியேனுனையே
மேதினியதனில்நாயினுக்கடையேன் வழிவிடவேணுமையே
தானமுந்தவங்களொன்றுங்காணு தடியேனுனையே
தளரவிடவேண்டாமொருகோடி தருமமுண்டையே
அல்லும்பகலுங்களாதாவாமலே ஆளாகினேனையே
அன்புடனேநல்லகதிபெறுவாயென் றனுப்பவேணுமையே

விருத்தம்

சிலைபணிந்திடும்வெளிறிந்திடச் செய்திடுந்திருமேனியைக்
கலந்தணைந்திடவேண்டுங்காதலைக் கண்டிராயகிலமதனைத்
தலைசுமந்திடுஞ்சேடனார்த் தலைமைகொளும்நந்தனரை
விலைக்குவாங்கியபெருமையாலிவன் வேணதெல்லாம்பேசுவான்.

வசனம்.

இப்படி சிதம்பரம்போக உத்தாரங்கேட்க நந்தனருடைய சிவ பக்தி பிரதாபத்தை ஆதிசேடனாலுஞ் சொல்லவொண்ணாத மகிமை கொண்டமகானுபாவனை அடிமைக்காரனென்றுவேணபடிபேசுவார்.

இராகம்-முகாரி-தாளம்.

மாடுதின்னும்புலையா வுனக்கு மார்கழித்திருநாளோ
தேடியெடுத்தாரிடத்தேபோய்த் தீண்டாதேபோடா
ஆடுதின்னும்புலையா வுனக்கு யானித்தெரிசனமோ
நாடுசிரிக்கும்வார்த்தைகளன்றோ நாடாதேபோடா
நண்டுக்குக்கலியாணம் ஊளை நரிக்குச்சங்காராந்தி
பண்டிகைப்பூசத் திருநாளுண்டோ பறையாநீபோடா

பூசைகள்செய்வாயோ ஆண்டவன் பொன்னடிதொழுவாயோ
கூசல்போடாதேபோடா கூழைக் கும்பிடலாகாதே
கங்கையிலாடுவையோ வங்கே காணிக்கைபோடுவையோ
இங்கிதமறிவேனடிக்கடிவந்து இரையாதேபோடா
அஞ்செழுத்தோதுவையோ உனக்கு ஆனந்தத்திருக்கூத்தோ
வஞ்சகவார்த்தை நாளைத்தெரியும் வாராதேபோடா

வசனம்.

அடாநந்தா சபாசு நன்றாயிருக்கின்றது நீ சிதம்பரம்போகவேண்டுமென்றுகேட்பதை ஆலோசித்தால் மிகுந்த ஆச்சரியமாயிருக்கிறதென்று வேதியர் பின்னுஞ்சொல்லுகிறார்.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

அடடாநந்தனே தில்லைக் கனுப்புமென்றென்னைகேட்ப
தாச்சரியமிகவாச்சரியம்

அநுபல்லவி.

அடடாகட்டுக்கதைகளனைத்துமிங் குதவாது
நடடாவயலைத்தேடி நடவுநட விப்போது(அட)

சரணங்கள்.

ஈனசாதியிற்பிறந்தோ னுனக் கவ்விடத்தி
லென்ன அலுவ லுண்டு-அல்லவென்று
போனபோதிலுமூவா யிரவரிருக்கும்வீதி
புகுந்துநீ கடந்துக் கொண்டு

மானும்மழுவுஞ்சிர மாலையணிந்த வரு
மாற்றலர்திரிபுர மதனையெரித்த பெரு
மானுக்கியலுந்திரிபுர மஞ்சனோற்சவந் திரு
வாதிரைப்பலன்பெற மாட்டாய்சொற்படி யிரு(அட)

வேழ்விகளொருபுறம் வேதியர்களியற்றும்
மேன்மைகள்மிகத் தங்கும் அந்தத்
தாழ்மையிலாததிவ்யத் தலம்போல்வதற்குத்
தடையில்லையெனப் பொங்கும்

தன்மையிதெல்லாங் கனவாகமுடிய வரும்
சாதியிழவையோ சித்தாலேதெரிய வரும்
பன்னிபன்னிப்படித்தேன் பரவாயற்றாயெ வரும்
பட்டால்தெரியும் பறையனுக்கென்பதுபோல் வரும்(அட)

அல்லும்பகலுஞ்சொ றளித்துக்காத்திடுந்தெய்வ
மானவம்பல வாணன் - இங்கிருக்க
தொல்லைப்படவோவேண்டாமென்றுரைத்திடுமென்
சொல்மறந்தநீ வீணன்
இல்லுந்திரியாவரப் பேச்சேதுக்கடா பிடித்
திருக்குமெனதுபிடி திரும்பாதடா பகடி
பல்லையொடித்து விடுகிறேன்பாரடா தகடி
பஞ்சைநீயாசமர்த்துப்பார்ப்போனெடடா தடி (அட)

வசனம்.

வேதியர்சொல்லிய சொற்களைக்கேட்ட நந்தனார்நீங்களென்னை த்தடியாலடித்தாலும் பிராணனைமடித்தாலும் கழுத்தையொடித்தாலும்சிதம்பரத்தில் நடித்தானைக் காணுமலிருக்கேனென்று கடுத்துச் சொல்ல வேதியருக்குக் கோபம்பிறந்து வாய்திறந்து சொல்லுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்,

பல்லவி

இனியுன்குற்றத்தைப்பொருப்பேனோ-அணுவள
வேனுஞ்சம்மதிப் பேனோ

அநுபல்லவி.

தனியாய்வேதசாஸ்திரந்தனையுணர்ந்தாலுஞ் சாதி
தன்புத்திப்போகாதென்றசரித்திரம்பொய்யல்ல நீதி (இ)

சரணங்கள்.

பலகாரமும்பழமும் பாலூட்டினுலும் பாம்பு
பழகாததற்குவொப்பாய் பகரலாகுமே வேம்பு
தலம்விட்டப்புறம்போநீதான்செய்யாதடா வீம்பு
தரையிற்கறந்தபாலுந் தாவுமோமுலைக் காம்பு (இ)
இடையிலிருக்குமிந்த இடும்பன்கடம்பன் சரி
இவர்களல்லாமலிதோ யிருப்போர்கள்சிறு நரி
நடையிலிருப்பேன்மஹா நல்லவனுருந் தெரி
நானுனைச்சேர்ப்பேனென்று நம்பாதேபரி கரி

வசனம்.

என்றுசொல்லிய வேதியருக்குநந்தனர் மிகுந்ததாழ்மையோடு மேழ்மையோடுஞ் சொல்ல வேதியருக்குக்கோபம்வந்து திருட்டுவேடங்கொண்ட முரட்டுபயலேயென்று மறுபடியுஞ்சொல்லுகிறுர்.

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்-நந்தா-அடாவுனக்கு
திருட்டுத்தனமாத்திரம்வேண்டாம்-நந்தா

அநுபல்லவி.

முரட்டுதனமாய் பேசாதேநிர் மூடா
முன்னும் பின்னுமறியாக்குடி கேடா
வரட்டுதவளைபோல்வாயாடாதே யேடா
வயலைமுழுதுஞ்சீர்படுத்திடப் போடா

சரணங்கள்.

புத்தியுள்ளவனகப் பாரு-ஏர்கொண்டுழுது
புஞ்சைநிலமுழுதுஞ் சீரு-செய்விதைத்து
வைத்திடினம்போற்குடி யாரு-இருப்பார்களுன்
னைத்துதிப்பார்சகல பேரும்
சத்தியமாகக்குண்டைகளைநீ கூட்டி
சார்ந்ததற்குவாயாரநீர் ஊட்டி
சத்தியுள்ளமட்டுக்குமே ரோட்டி
தக்கன்வுறன்றிறமது மிகக் காட்டி
மற்றுமற்றதனைத் தனைத்துமுடிவுற
மெத்தமெத்தசித்தமொத்துசெய்குவாய் (திருட்)

பட்டாங்குனக்கேதடா பாவி-என்சொந்தமான
பழனங்களுமீடேறத் தேவி-பூசைபுரிந்து
பொட்டெனப்பதம்பணிந்து சேவி-இதைமறந்தால்
போக்குவேனேஉன்னிட ஆவி
சட்டமாகவுன் சமர்த்தைக் காட்டாதே
சரணமென்றுமண்ணீரை யோட்டாதே
தட்டுவனேகைமிஞ்சி நீட்டாதே
சலப்புக்கஞ்சிநரியோட மாட்டாதே
விட்டுவிட்டுவிட்டுவிட்டு விடுவிடு
கெட்டுகெட்டுகெட்டுகெட்டு போகாதே(திருட்)

பாயுஞ்சலமுழுதும் கட்டி பதனமாகப்
பழையமெருவெடுத்துக் கொட்டி-சேறுபோலாட்டி
தோயுநடமுதலோ ரட்டி-வாராமற்செய்து
சொனனைலனுப்புவேனே ஙட்டி

காயமுள்ளபோதேநீதா னட
கத்தன்றன்னைக்காணப்போவா னட
எய்த்துவிட்டுப்போகப்போரா யட
யேத்தவாதிரைக்கனுப்பேனே நட
ராயன்ராயன்ராயன்ராயன்ராயன் சாட்சியாய்
தீயன்தீயன்தீயன்தீயன்தீயன் உன்னைவிடேன் (திருட்)

வசனம்.

இதுவும் வேதியர் சொல்லுகிறார்.

விருத்தம்.

வானிருந்த விடந்தேடிக் காணாமல் மாதவத்தோர் மதிமயங்கத்
தேனிருந்த செந்தாளைச் சிந்திப்பார் புந்தியுறத் தெளிந்தாரில்லை
ஊனருந்தும் புலையாநீ சிதம்பரத்தைச் சென்றாலு முண்டோமுத்தி
தானிருந்த விடம்விட்டுப் போகாமல் சஞ்சலத்தைத் தள்ளுவாயே.

வசனம்.

அடா வாடா மூடா கேளடா என்னைப்போலொத்த பெரியவர்களாலே கூடத்தேடி அறியப்படா ஜெகதீசனுடைய திவ்வியநாமத்தைநத்தையுரிஞ்சும்பறையாநீகேத்திக்குலைக்கலாமா இப்படி தத்திக்குதிக்கலாமா, வித்தையொன்று மறியா தவனிங்கே பத்தியெண்ணலாமா, நத்திமுத்திதேடலாமா, சுத்தமானபெரியோர்களிடத்தே சத்தம்போடலாமா, இங்கேநித்தம்நாடலாமா, வியர்த்தமான இந்தஜென்மமெடுத்துஞ் சித்திதேடலாமா, இங்கேபுத்திசொல்லலாமா அடடா இதுவெல்லாம்விட்டுவிடடா, நாத்தைப்பிடிங்கிநடடா, உன்தொழிலைத்தொடடா, தோல் கட்டிய தடியையெடடா, யாருந்திருடாமல் பார்த்திருடா களத்தில்படுடா, காவல்கொடுடா புல்லறுடா, முரடா, வழிதெரியாக்குருடா. நான்சொல்வதுகொரடா அடடா உன் செய்கையென்று கல்லாலேறிந்துதடியாலடித்துவாயால்திட்டி தேள்போலே கொட்டி இவனொரு ஆள்போலேநின்றான், அவர்நாள்போகுதேயென்றார்.

வசனம்

நந்தனார் வேதியரைப்பார்த்து நீங்களென்னையடிக்கலாம்நானும் அடிபடலாம் தங்களுக்குக்கைநோகுமென்று சொல்லுவார்.

தண்டகம்-ஆதிதாளம்.

அடித்ததுபோதுமையே-என்னை
அடித்ததுபோதுமையே
அடித்தாலுமுங்கள்கைவலி யாதோ

அடிமைவேலைசெய்யுமென்னுடன் வாதோ
படித்ததெல்லாமென்மனதிற் படாதோ
பாவியெனக்கு மினிமேற்றெரி யாதோ(அடித்)
நல்லவரேயுங்கள்மனதுப்பிர காரம்
நடக்காமலிருந்ததுபவ காரம்
சொல்லத்தெரியுமோ எனக்குப சாரம்
சுகுர்தசாலியுங்களாலேயிந் நேரம்(அடித்)

வசனம்

நந்தனார் ஐயரைத்தலைவணங்கிச் சொல்லுவார்

கீர்த்தனம்-மோகனம்-ராகம்-ரூபகதாளம்.

சரணங்கள்.

இரவுகாத்தகிள்ளை யாச்சே-நான்
எடுத்துச்சொன்னதெல்லாம் போச்சே
பறையனசொல்லுபழு தாச்சே-நீங்கள்
பார்ப்பாரென்பதுமே லாச்சே
ஏழைசொல்லம்பல மாச்சே-தெய்வ
மில்லாமலெங்கையோ போச்சே
சேரியேசொர்க்கமென் றாச்சே-தில்லைச்
சிதம்பரமென்பது போச்சே
விழலுக்கிரைத்தாப்போ லாச்சே-எந்தன்
வேண்டுதல்வீணாகிப் போச்சே
கண்டதைக்கண்டிட லாச்சே-நல்ல
காலம்பிறக்காமல் போச்சே

வசனம்.

நந்தனார் பெரியோர்கள் கோபத்தைஎளியேன் தாங்கேனென்று சொல்லுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பெரியார்சினமடையாரடைந்தாற் பெருங்கடல்தீயாதோ
பேயன்தாங்குமோவேழை இம்மாத்திரம் பிழைபொறுத்தாளுமையே
அல்லும்பகலும்நானறிந்துமேதோ வறியாமலேம்பானேன்
ஆசைகொண்டேன்திருவம்பலத்தெய்வம் மோசஞ்செய்யுதையே
பாவியெனைத்தொடர்ந்தடியதாலும்மன்றன் பாழ்வினைதீராதே
பார்தனில்பேர்சொல்லாதவனென்றே படைத்ததுபோதாதோ

சிங்கம்புசித்திடுமிரைச்சினையவேறொரு செங்காய்தொடலாமோ
சிதம்பரம்நான்தொடலாமோசாதியில் சின்னவனானன்றே
இன்னமுஞ்சிதம்பரம்போவேனென்று இங்ஙனேவருவேனே
இம்மட்டும்போதுமையேடீங்கள்தய விருந்தாலதுபோதும்

விருத்தம்.

சேரிவந்தவர் செவ்விய வேதியன் சினத்தால்
காருக ளடர்ந்திடுஞ் சோலையினின்றவன் கருத்தை.
யருலாவிய பரமனற்றுண்மலரிறங்கி
நீரணுகியநந்தனுமிப்படி செய்தான்.

வசனம்.

தங்களையருக்கு தலைவணங்கி பெரியகும்பிடுபோட்டு ஒருசோலையிலிருந்து சமாதிபண்ணுவார், தன்னுடைய சரீரத்தைதில்லைவெளியிலே கலந்துகொள்வேனென்று வீரவைராக்கிய பட்டத்துடனே சேரியில் வராமல்தானே யிருந்தார் தன்னுடைய துயரங்களையெல்லாம் அம்பலவாணருக்கே ஒப்புவித்துக்கொண்டாடுவார்.

விருத்தம்.

வேதியரிப் படிச்சொல்ல வெந்துமனம்வேறாகி வினையோவென்று
சாதியிலே பாவமிது நீயன்றே பிறப்பித்தாய்சுவாமியென்னை(க்கும்
சோதனையோசெய்கின்றா யெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்த்தோய்ந்திரு
ஆதிகுரு வலவோநீ பாப்பானுக் குள்ளிருந்து மனுப்பு வீரே.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாவுன்னடைக்கலம்பொய்யாகியதேகமடைக்கலம் (ஐயா)
அத்தாநான்வருவேனேஅம்பலத்தைப்பாரேனே
சற்றேயாகிலுங்காண்பேனேசந்நிதியைநான்என்செய்வேன். (ஐயா)

விருத்தம்.

தாழில் லாதவிப் பிறவியைத் தானெடுத் தஞ்சி
தூறு பட்டனற் கீழ்க்குல மாகியித் துன்பம்
நீறு பட்டிடு மல்லவோ தில்லையி னின்றால்
பேறு பெற்றிடு வேனதற் கும்மொரு பிசகோ.

இராகம்-எதுகுலகாம்போதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஐயோதெய்வமேயிந்தவைபார்க்கடிமையானேன்
செய்யாவினை செய்தல்லவோ

உள்ளங்கரைந்துருகி உய்யும்படியாய்க்கேட்கில்
கள்ளக்குமரனல்லவோ
ஆலைக்கரும்பதுபோ லாச்சுதங்கமுழுதும்
வேலைக்கிடமுமில்லையே
பாவியெனக்கோவந்த பாப்பான்மனதிரங்கான்
ஆவிதவிக்குதல்லவோ
கோவில்கும்பத்தைக்கண்டால் கோடிவினைகள்தீரும்
பாவிக்குக் கிடையாதுகாண்
தில்லையம்பலவாண தெய்வம்புலையர்க்காகக்
கல்லாச்சமைய லாச்சுதே
பொன்னம்பலவாவுன்னைப் போற்றும்வகையில்லாமல்
இன்னம்பிறவி யேறுமோ
அன்னைதந்தையும்நீயென் னுவிபொருளும்நீயுன்
சன்னிதிவரச்செய்வாயோ

விருத்தம்

அடிமுடி யொன்று மில்லா தம்பலத் தரசேயுன்பால்
கொடியனுன் வந்தாலென்ன குறையுமோ வதனல்நீதி
நடலைசெய் பார்ப்பான கையில் நடுங்கவோ விடுத்தாயென்றும்
படிமிசை வீழ்ந்தானடி பதறுவான் கதறுவனே.

இராகம்-லாவணி-யமுனகலியாணி

பல்லவி.

செய்யுமுபாயமறியேனறியேன்
அரகரசிவனே தில்லைச்சிவனே

பத்துவருஷகாலமாகவந்து
பாப்பானைக்கேட்டேன்
சித்தமிரங்கிபோய்வாவென்றொருநல்ல
சேதிசொல்லக்காணேனையோ (செய்யு)

பாவிபுலையனாய்ப்பிறப்பேனோ
இந்தப்பாரினிலிருப்பேனோ
ஆவிதவிக்குதேபொன்னம்பலவாவுன்
னடிக்கமலங்காணேனையோ (செய்யு)

பல்லுமுளைத்தநாள்முதலாய்
இந்தப்பாடுபடுவேனோ

தில்லைநாயகாகனகாவென்றுனைத்
தேடும்வகைகாணேனையோ. (செய்யு)

நாற்பதுவேலிநிலமிருக்கிறதை
நடுகவேணுமென்றார்
காப்பதாருகளைபிடுங்குவதாரென்று
கடுகடுத்தபேச்சுக்கடியேன். (செய்யு)

ஆற்றிலேகுளத்திலேவிடுவேனென்
றுவதைப்பிடித்திழுத்திடுவேன்
பார்த்தினிக்கிருபைசெய்யாவிடிற்பறையன்
பழிவீண்போகாதுசொன்னேன் (செய்யு)

தில்லைச்சிதம்பரத்தைக்காணுவிடிலென்
தேகந்தெரியாது
சொல்லிவிட்டேன்பொன்னம்பலவாவுன்
சொர்ப்பனசபைக்குவருவேனோநான் (செய்யு)

விருத்தம்.

கடுவருந்தியும் பணிகல னுகவுங்கற்றைச்
சடில மேவிய பிறைபுனற் றறிக்கவுந்தகுமோ
விடுவ தில்லையுன் னருகினிற் றனொரு வேங்கைக்
கொடியன் வந்தி னுலென்ன தில்லையிற் குறையோ.

இதுவுமது.

மாவளர் தில்லை மாநகர் வீதியு மதிலும்
கோவி லுந்திருக் கூட்டமுங் கண்டுகண் குளிரப்
பாவி யாகினேன் காயத்தை யேதுக்குப் படைத்தே
னுவிலானிருக் தும்பர கதியடைந் திலனே.

இதுவுமது.

ஆதி நாண்முதற் றவம்பெறு மாமுனிக்காக
நாத மோங்கவே நாடகம் புரிந்திடு நாதன்
பாதம்போற்றியென் னேரமும்பாவியா னந்தன்
ஏதந் தீரவே கனவிலு மீசனு மிருந்தார்.

வசனம்.

தில்லைத் தலத்தைக்காணுகஜேன்மமிருந்தாலென்னபோனுலெ
ன்னவென்று நிச்சயம்பண்ணி மனதுருகிவாடும்வேளையில்கொஞ்சம்

நித்திரைபோலேகண்டு அந்தநித்திரையில் அம்பலத்தேவன்வந்து சொல்லுவார்.

---

இ-ம்-எ துகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

கனவினில்கண்டாரே-நந்தனார்-கனவினில்கண்டாரே

அநுபல்லவி.

மனதிலெப்போதும் வருந்தியடிபணியும்
கனகசபேசனைக் கண்ணாற்காணுமல்(கனவி)

சரணங்கள்.

நீநடுங்கழனிகள் நானடச்சொன்னேன்
ஊனமில்லாமலுன் னுடையவன்களிக்க
மானிடப்பிறவியி லுனக்கிணையார்பத்தி
மானில்லையெனத்தில்லை நாதன்வந்துரைக்க(கனவி)

கங்குல்பகலாய் களித்தநின்னருளாற்
சங்கரனேயென்று சாருநன்னிலையால்
அங்கம்புளகித மாச்சுது அதனை
யிங்கேவந்தேனென்று யீசனும்புகல(கனவி)

விருத்தம்.

அறிவுமிகுந் தாற்றலுடன்சிவபெருமான்
பெயர்சொல்லி யாற்றுநாளில்
கறைமருவுமிடரழகன் றனதடிமை
வெறியகலக் கனவில்வந்து
குறைபறவே கழனிகளை நடச்சொன்னே
முனக்குவிடை கொடுக்கே னென்றே
மறையோது மவர்க்குரைதது நீவிரைந்து
வாவென்று மனத்ட்சென்றார்.

நந்தனார்கனவில்-நடேசமூர்த்திசொன்ன-வசனம்.

நம்முடைய நந்தனாரே உன்னிட கழனிகளை நமது பூதகணங்களாலேநடச்சொன்னோம் வேதியருக்குக்காட்டினால்உத்தாரங்கொடுப்பாரென்று சொல்லி தான் அம்பலத்தே சென்றார்.

நந்தனர் வயல்களைக்கண்டு சந்தோஷமடைவார்

கண்ணிகள்.

களையெடாமல்சலம்விடாமல் கதிரொருமுழங்காணுமாம்
களிக்குதுபயிரிருக்குது அதைக் கட்டுகட்டவேதோணுமாம்
பழுதிலாமலேரிகுளங்கள் பள்ளமேடுதண்ணியாம்
பரமசிவனைப்பணியுநந்தனர் பயிரிடுந்திருப்பண்ணையாம்
கனவில்வந்துவுருவமாகி கருணைமாரிகண்டனன்
கடுகிநடந்துவேதியரிடங் காணவென்றுசென்றனன்

விருத்தம்

அய்யரே வாருமென்று அழைத்திடும்நந்தனரைத்
துய்யவே தியருங்கண்டு தொல்புவித் தெய்வமெல்லாம்
பொய்யிது வென்று தள்ளிப் புலையனும் வந்தானென்று
செய்யவேண்டியது செய்யச் செப்புவா ஞெப்புவானே.

பலவித இராகம்சேர்ந்தகீர்த்தனம்- இ ம்-வராளி- ஆதிதாளம்-

வேதியர்-சொல்லுகிறூா.

பல்லவி.

நந்தா வுனக்கிந்தமதி-வந்ததென்ன-தந்ததாரு.

அந்தரஙகஞ்சொந்தமா யிருந்ததுமறந்துபோய்
விந்தையாய் வினைந்தன்றோ அந்தவேளைபுந்தியில்லை (நந்தா)

சரணங்கள்.

தோடி.

கொல்லைக்காட்டுநரிபோல பல்லைக்காட்டிபேசுவாய்
கல்லைக்காட்டிகோபங்கொண்டு சொல்லைக்காட்டியேசுவான்
தில்லையென்றுசொன்னதெல்லா மில்லையென்றுபோச்சுதா
கல்லையென்றுஐயர்சொன்ன சொல்வேலிசமாச்சுதா
சித்தமுந்தெளிந்துதா உத்ததுவுணர்ந்துதா
பத்தியுந்துலேந்துதா கத்தலும்பறந்துதா
சட்டம்-சட்டம்-நல்லது-நல்லது மெத்த-மெத்த சந்தோஷம்

மத்தியமாவதி.

இப்படிஅப்படிசொல்லாதே தப்பெடுத்தடிப்பையா
சொற்படி யொப்புதலாநீ மெய்ப்படிநடப்பையா
கள்ளக்கும்பிடுதள்ளடா காரியங்கைக்கொள்ளடா
எள்ளுகொல்லைக்காரடா எங்கும்சுற்றிப்பாரடா

தெய்வமென்பதுஞ்தம் தெளிந்துபாருசுத்தம்
கையைக்கொட்டுசத்தம் கண்டுக்கொள்நித்தம்
ஹுறக்கமேயின்பம் ஊனிழந்தாலேதுன்பம்
சாண்வயிற்றுக்கு அப்பு சாதிமுறைமைவப்பு
ஓகோ-கோ-பலே-பலே சபாசு-கண்டு-கொண்டாய்

கேதாரகௌளம்.

சூதாடிதோற்றவன்போல் வாதாடிநிற்பதற்கு
வேதாந்தசாஸ்திரங்கள் காதாலேகேட்டிருந்தும்
என்னகாரியம்அதிலென்ன வீரியம்தள்ளுதள்ளு

புன்னாகவராளி.

தில்லையென்பதுகாட்டிலுண்டு கேட்டதில்லையா
தேகம்பட்டால்புண்ணாகும் பார்த்ததில்லையா
அம்பலமாவதுஆகாச முற்றுப்பாரு
அருளில்லைபொருளில்லை கண்டுசேரு
பத்தியென்றுஞ்சித்தியென்றும் வெத்தியென்றும்முத்தியென்றும்
இத்தனைநாள்கற்றதிலே அத்தனையும்பித்தாச்சு
மாறுபாட்டுக்காரன்வார்த்தை கூறுபடுமோ
தாறுமாறுபேசினதால் சோறுபோடுமோ

நாதநாமக்கிரியை.

எல்லாமுழுப்புரட்டு வல்லான்வகுத்தவழி
சொல்லாதேசும்மா நில்லாதே
காரியத்தைப்பாரடா உனக்கிணையாரடா
காசுபணஞ்சேரடா இதுநல்லூரடா

மாஞ்சை.

கஞ்சிகூழுகுடித்தாலும் பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும்போம் சஞ்சலமென்ன

மத்தியமாவதி.

சம்பாநெல்லிருக்குனக்குத்தாரேன் ஒற்றைச்
சல்லாக்கிழித்துனக்குத்தாரேன் ஒத்தை
கண்டாங்கிச்சேலையொன்று துண்டாய்க்கிடக்குதுந்தன்
பெண்டாட்டிக்கிக்கொடுத்து நன்றாய்ச்சுகமாயிரு

புன்னாகவராளி.

துண்டுவெட்டுப்பாக்குகின்று அண்டைவெட்டிப்போர்த்தையா
கண்டைக்கடடையில் மூண்டிருக்குபார்த்தையா

மோகனம்.

காணியில்லாதவனொரு மாணியில்லதவன்போலே
தோணிருலுந்தாணுது கோணிகடந்தாலுமென்ன
பெண்டாட்டியில்லாச் சுகமல்லவோமனந்
கொண்டாட்டங்கொள்ளா ததைச்சொல்லவோ

ஆரபி.

எருவிட்டுழுதவயல் மாறுவெட்டுத்தேவையில்லை
எதுவெட்டினாலுந்தாங்குந் துருவிட்டுப்பார்க்கவேணுந்துரையே
நிலம்பாராதபேர்கட்குப் புனையேயிதுவல்லாமல்
வேறேயுண்டோயிறைமேய இந்தவூருக்கு விதுவல்லவிரையே
அப்பப்பா-இகத்திற்கு.

அசாவேரி.

மூலைக்கால்விளைந்ததாலல் சேலைக்குக்காணும்
உனதுகூலிக்குக்காணும் குழந்தைபாலுக்குக்காணுமல்லவோ
ஊருக்குளிந்தநிலஞ்சப்பையே நீவாரிவிடவேணுமிந்தக்குப்பையே

சாவேரி.

வாரிக்காலைச்சுற்றிப்பாரு கோரையைப்பிடுங்கிநம
தேரியைவுழுகச்சொல்லு வீரியைநடுகச்சொல்லு
செட்டியார்குளத்தருகே முட்டிருக்குப்பேர்த்தையா

புன்னாகவராளி.

எல்லாமுனதுபொறுப் பெல்லாமுனதுசுக
மல்லாமல்வேறேகதி இல்லை இல்லை
கட்டியடிக்கட்டளையில் விட்டதுமுளைத்துதா
பொட்டைத்திடல்குட்டையிலே நட்டதுபலித்துதா
காடுவெட்டிநஞ்சைபண்ணு மாடுகட்டிவைக்கோல்போடு
பாடுபட்டுழைத்தால்ன்றே வீடுகட்டிவாழலாம்(நந்தா)

வசனம்.

இப்படிச்சொல்லும் வேதியரை பண்ணையைப்பார்க்கவாருமெ
ன்றுநந்தனர்கூப்பிடுவார்.

விருத்தம்.

பண்ணை யாவையும் பாருமென் றழைத்திடப் பரிந்து
கண்ணு லாவிய வேதியன் களிப்புற நந்தன்
பண்ணு லாவும்பொன் னம்பலக் கூத்தனைப் பரவி
எண்ணு லாவருங் காதல்கொண் டிருந்தனர் தாமே.

வசனம்.

கேவலமாகிய நீசன் சிவகணங்களாலே ஒருராத்திரியில் நடவு நட்டு அறுப்பறுக்கும்வயலை வேதியர்கண்டு ஒன்றுந்தோன்றாமல் உலகவாசனை யற்றுநின்றார்.

வசனம்.

நந்தனார் அம்பலவாணனைக் கொண்டாடிக் கூத்தாடுவார்

கடுக்கா.

நந்தனனந்த பரிதமானார்
நந்தனாரும் ஆனந்தமாகினார்
சொந்தமானவயல் வந்துபார்க்கையில்
விந்தையாச்சுபல பந்தம்போச்சுது
சிந்தைதீரவேயந்தரங்கத்தில் (நந்தனார்)

நீசச்சாதியென்றுயேசிப்பேசுமிந்த
தோசிவேதியனு மாசையாகவே
தேசமுற்றுந்தில்லை வாசமாகுநட
ராஜமூர்த்திக்கு தாசனென்றுவரும் (நந்தனார்)

வாரும்வாருமிதைப் பாரும்பாருஞ்சிவ
ஞரேவந்துசெய்யுங் காரியங்களிது
பாரின்மீதிலிணை யாருமில்லையென்
றாரினுள்ளபெரி யோருஞ்சொல்லச்சொல்ல (நந்தனார்)

சித்தமீதிலொரு குத்தமேதுமில்லை
சுத்தமானவித யத்திலுள்ளசிவ

பத்திபண்ணிவெகு சித்தியாகிவர
முத்திதேடிவரு பத்தனென்றுசொலும் (நந்தனார்)

வசனம்

இப்படிச்சொல்லும்வேதியரைபண்ணையைப்பார்க்கவாருமென்று நந்தனார்கூப்பிடுவார்.

இராகம்-பியாகடை-அடதாளச்சாப்பு.

பல்லவி

நந்தனாரேயுன்றன் பெருமையின்றுகண்டேன்
நானென்வினையைவிண்டேன்

அநுபல்லவி.

விந்தையைக்குறியாமல் விழலனையறியாமல்
வீம்புக்குக்கச்சுகட்டி வீசினேனெனையாளும் (நந்தனா)

சரணங்கள்.

அறியாமனத்திலே ஏதேதோபேசியுன்றன்
அருமையைத்தெரியாமற்போனேனே மெத்த
சிறியோர்செய்தபிழைபெரியோர்பொருப்ப சென்று
செப்பும்வார்த்தையுமக்கே கனவானே இந்த
முறையுணர்ந்தோர்க்கென்ன தான்சொல்லத் தோணும்
மூடன்மேற்கிருபைவைத்து முழுதுங்காத்திட வேணும்
நினைவுற்றவருட்பெற்றோர்க் கேதுநிகராங் காணும்
நினைக்குமுன்னடி வணங்காதோன்வந்துயர் சேணும்

நந்தனாரே

நேற்றுப்பொழுதளவுஞ் சும்மாவிருந்ததிந்த
நிலங்கள்முற்றும்பயிர்கள் முளைத்துக் கதிக்கச்
சாற்றுங்கதிர்கள்முத்திச்சாய்ந்து அறுவடைக்குத்
தக்கதாயிருக்குதேமிகக்-கிளைத்து உமது
ஆற்றல்தனக்குநிகராவரோ யாவரும்
அய்யாவுனதுநல்லவருளால்நலமே பெரும்
நாற்றிசையோர்களும்நாடிப்பணிய வரும்
நாயேன்களிக்கமனம்நயந்துகிருபை தரும்

நந்தனரே

குண்டைகழுநுங்கலப்பைக்கோலுங்காருவிதையும்
கொட்டதகிலிருக்கவீர்செய்தீரோ — அந்த
அண்டர்பணியுந்தில்லை யாண்டவனே — யுமக்கு
அடிமையாளாகிவந்துசெய் — தாரோ
துண்டத்தனத்தாலென் றெண்டுகரும்மைக் — கொண்டேன்
தொல்லுலகத்துள் ளோர்யாருமேசக் — கண்டேன்
தொண்டனரே யுமக்குத் தோதங்களை — விண்டேன்
சொல்லும்பணிகள்செய்து சுகப்படத்துணி — வுண்டேன்

நந்தனரே.

வசனம்.

என்றுவேதியர் நந்தனரைப்பார்த்துப் பின்னுஞ் சொல்லுவார்

இதுவும்வேதியர்சொல்-விருத்தம்.

கரைபடுங் கண்டன் றாளைக் கருத்தது பெறவே நோக்கிக்
குறையரும் நந்தனரைக் குலமது கீழென் றெண்ணி
மறைபுகல் பெருமை யாலே வருந்தினேன் கொடியே னென்று
இறைபடு மனம்போலஞ்சி யேங்கியே யாற்றுவானே.

இராகம்-புன்னகவராளி-ரூபகதாளம்

குத்தமெத்தனைசெய்தபோதிலு முந்தன்சித்தத்தில்நினையாதே சிவ
பத்தனென்றறியாமல்பதறிவார்கதைகள்செ ன்னபாவந்துலையாதே
புலைபர்கள்பரகதிதேடும்படியவர் புண்ணியஞ்செய்வாரோ-உன்னை
கலிதீரக்கண்ணாரக்கண்டபேர் எல்லாங் காட்சிபெருவாரோ
உருவமனதறியவொருவனலாகாதென் றுலகம்மொழியாதோ-அது
திறமாச்சுதினியுந்தன் ஜென்மசாபலமாச்சு தெய்வமிரங்காதோ
ஜாதியிலிழிகுலஞ்சாஸ்திரங்கிடையாது சந்தேகப்படலாமேன் இப்
போ-ஆதிசிதம்பரரகசியம்பாரென்று அனுப்பிவிடலானேன்.

வசனம்.

இப்படி வேதியர் மிகவும் பரவசமடைந்துகடந்தநாளைப்போவார் கனவிலே ஈசன்வந்து கருணைசெய்தாரென்றார் அதற்குநாளைபபோவாரைப்பார்த்து வேதியர் சொல்லுகுறார்.

இராகம்-எமுனா-கல்யாணி-ஆதிதாளம்.

நந்தாவுன்கனவினி லெப்படிவந்தார்
வரந்தந்தாரெந்தாய். (நந்தா)

சந்ததமுஞ்சனகாதி முனிவர்தொழுஞ்
சச்சிதானந்தமூர்த்தியல்லவோ (நந்தா)

ஆதிமுடிவுகிடையாதபராபரஞ்
சோதியல்லவோநீச சாதியென்றறிந்தும் (நந்தா)
அண்டாண்டநிறை கின்றசபாபதிக்
கொன்றும்பேதமில்லை (நந்தா)

வசனம்.

வேதியர் நான்செய்த பிழையெல்லாம் பொறுத்துக் கொள்வி ரென்றுசொல்ல நந்தனர் மறுவுத்தரவு கூறல்.

இராகம்-தெண்டகம்-எது நூலகாம்போதி.

வேதியர்-ஏழைப்பார்ப்பான்செய்திடும்பிழையை
யேற்றுக்கொள்ளாதே
இனமறியாதவன்முன் புத்திக்காரனென்பதும்பொய்யோ
நந்தனர்-பொய்யாக்கியவிந்த வுலகத்தைப்பார்க்கும்
புண்ணியவானே நான்
புலையனுங்களடிமையல்லவோ புத்திசொல்லுமையே
வேதியர்-புத்தியுண்டு வித்தையுண்டு
பத்திகிடையாது வாயால்
புலம்பினதாலென்ன மனமடங்காதுபோதங்கிடையாது
நந்தனர்-கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யுமையே நான்
கீழ்க்குலமல்லவோ நாயினுங்கடையேன் கீர்த்திசெய்விப்பீரே

வசனம்.

பரமபத்தனுகிய நீயேஎனக்கு அடிமைவேலை செய்பவன்போல வந்தபடியினுலே என்பிறவிப்பிணி துலைந்ததென்று சொல்லுவார்.

விருத்தம்

அவப்பொழுது போனதன்றி மறைமுடிவை யுணர்கனிய
வறிவி லுன்னித்
தவப்பொழுதுங் கணப்பொழுதுங்கண்டறியாப் பாவியெனைச்
சார்ந்தா ரன்றோ
சிவக்கொழுந்தி னடிமையென்று பெயரிட்டு வேலைகளைச்
செய்த தாக
பவக்கடலைக் குளப்படிப்போல் தாண்டிவரச் செய்ததன்றன்
பத்திதானே.

## ஆநந்தக்களிப்பு.

நந்தாநீசிவ பத்தன்-உன்னை
நம்பாமலேமோசமானேநான் பித்தன் (நந்தா)

பூமிக்குள்நீயொரு சித்தன்-இந்தப்
பூமிக்குநானொருசாஸ்திரப்பிர சித்தன் (நந்தா)
காமிக்குள்ளேவெகு மத்தன்-உன்னைக்
கண்டுதெரிசித்தபேர்களே முத்தன் (நந்தா)

படித்துமென்னவெங்கள் வேதம்-அதில்
பார்த்ததில்லையிந்தபகவனற் கீதம்
எடுத்துசொன்னாய்சிவ போதம்-அது
ஏற்காமல்போச்சுதுயென்பிடி வாதம் (நந்தா)

தெவிட்டாதசோகம பானி-உன்றன்
தேகமுழுதிலுஞ் சிவன்றிரு மேனி
பகையாகியஒரு கூனி-போலே
பழுத்தேனானும்நீயாத்தும ஞானி (நந்தா)

பவசாகரந்தாண்டிச் சென்றாய்-உள்ளே
பார்த்துணர்ந்துபரமானந்தங் கொண்டாய்
தவமாமுனிபோலே நின்றாய்-தில்லைத்
தாண்டராயனைக்கண்ணால்நீ கண்டாய் (நந்தா)

வசனம்.

இப்படி வேதியர்சொல்லும்போது நந்தனார் மனம்நொந்துகை கால்நடுங்கி ஐயரைச்சுற்றிவந்து தலைவணங்கிஎனக்கு அன்னங்கொடுத்து ஆடையளித்து இத்தனைநாளுங் காப்பாற்றின பெரியவரே உங்களுக்கடிமைவேலைசெய்யு மென்னை இப்படிப் பெருமையாய்ச் சொல்லவேண்டாமென்று சொல்லுவார்.

இராகம்-கலியாணி-ரூபகதாளம்

பல்லவி.

அய்யாசொல்லு வேனே-உம
தடிமைபறையன் தானே

அநுபல்லவி.

மெய்யாகவேயிந்த மேதினிவாழ் வோர்கள்
வேலைசெய்யூழியர் தம்மையோதாழ் வார்கள் (அய்யா)

சரணங்கள்.

வேம்புக்குயர்ந்தமதுரங்கள் பூட்டினும்
வீறுமதன் குணம்மாறுதெந் நாட்டினும்
ஆம்புத்திக்காரனென்னாலேயாவ துண்டோ
அய்யனருளையல்லாமலும்வே றுண்டோ (அய்யா)

மேவுங்கீரைத்தண்டுமேருவைத் தாங்குமா
வீசுங்கதிர்முன்மின்னார்பூச்சி யோங்குமா
ஆவதழிவதெல்லாமையன் றன்னாலே
ஆச்சுதென்றாலென்னவாச்சுது என்னாலே(அய்யா)

முன்னமேசெய்தவினையின்வ சத்தாலே
மூடப்புலையனாய்மேவி யதனாலே
இன்னல்படுவதுடனின்னமும் ஏண்டா
ஏந்திக்கொள்ளுமெனறுகொடுக்க வேண்டா(மையா)

வசனம்.

நந்தனார், தனது ஆண்டையாகிய வேதியரைப் பார்த்து தங்களுடைய திருவாக்கினால் என்னையுமிப்படிப் புகழலாமாவென்று மிகவும் வணக்கமாய்ச் சொல்லுவார்.

இராகம்-அமிர்தகல்யாணி.

பல்லவி.

சின்னசாதியல்லவோசிதம்பரம்போய்வருகிறேனென் (சின்ன)
அன்னை தந்தையொருவரில்லையடைக்கலமென்னையாளவேணும் (சி)
ஈரமில்லாதநெஞ்சமாகியிறைச்சிதின்றுவுடல்பெருத்த (சின்ன)
அல்லும்பகலுமதுவையுண்டுவறிவுமயங்கியாட்டங்கொள்ளும்(சின்)

வசனம்

இப்படிச்சொல்லிய நந்தனாரைப்பார்த்து வேதியர் சொல்லுவார்.

இராகம்-பைரவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஆருக்குப்பொன்னம்பலங்கிருபையிருக்குதோ
அவனேபெரியவனாம்

அநுபல்லவி.

பாருக்குள் வீடுகள் மாடுக ளாடுகள்
பணமிருந்தாலவன் பெரியவனாவானோ (ஆருக்)

சரணங்கள்

வேதபுராணங்களோதினதாலென்ன
வேலைசூழ்பணி மாதாலென்னகாரியம்
சோதனையாக வாராதொருநாளும்
மண்ணாசைவிண்ணாசை பொன்னாசைபொல்லாது (ஆருக்)

பாணன்மதங்கனடங்கவேசெய்தநீதா
பாலகிருஷ்ணன் தினந் தொழும்பொன்னம்பல
வாணனென்றுதர வாய்விரும்பாதவன்
வானவராகிலுந் தானவன்சின்னவன் (ஆருக்)

வசனம்.

பொன்னம்பலஞ் சிவபத்தியுள்ளவன் பெரியசாதி சிவபத்தியில்லாதவன் பார்ப்பானாயிருந்தாலுஞ் சின்னசாதி, ஆனபடியினாலே திருப்புன்கூரி லுனக்காகப் பரமசிவன் நந்தியைவிலக்கித் தெரிசனங் கொடுத்ததும், நீகுளம்வெட்டினதும், ஒருராத்திரிகாலத்திலே நாற்பதுவேலிநிலமும் நடராஜமூர்த்திபேவந்து நடவுநட்டதும், பார்க்கும்போது நீயே மகாபுண்ணிய புருஷனென்று சொல்லவேணுமேயல்லாதுவேறில்லை நீ இதுவரையி லெனதுவார்த்தையைத்தட்டினதுமில்லை, ஆகையால் எனக்கு குருவாகிநின்று உபதேசம் பண்ணென்று பின்னும் சொல்லுவார்.

இராகம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி

நந்தாநீகுருவுபதேசம்-நவிலிடவேணும்
நான்கடைத்தேற (நந்)

அநுபல்லவி.

நொந்தாநான்கதிபெற மாட்டேன்
நோயினும்பிறவிக்கடலிடை வீழ்வேன் (நந்)

சரணங்கள்.

மந்தாரப்பூவெடுத்தானர் மலரடிசாத்திவாழவென்னறிவு
சிந்தாமல்வாந்தரவேணும் சிதம்பாகசியர்தெரிசித்திடவே (நந்)

வைத்தார்கருணைக்கடலுடன் மனதிற்சென்றுநீநிர்த்தம்புரிந்து
ஒத்தாசைபூதகணங்க ளுரிமையுடன்வந்துழியஞ்செய்ய (நந்)

பெற்றாநீபெரியவனுந்தன் பொருமைநானறிவேனேமுடன்
சுத்தாமல்மோசமதானே நம்பிக்கைசொன்னேன் நற்கதிபெறவே.

விருத்தம்.

வேதமோடாஞ்செய்திடும் நூற்களைவிதித்தும்
ஆதனுகினைனடியவர்ச் சடுஞ்சினமடையும்
பாதகப்புரிகதேனென்று நந்தனைப்பரவி
ஏதந்தீரவே வேதியருபசரித்திருந்தார்

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியர் வார்த்தையைத் தள்ளப்படாமையால் சுற்றிவந்து தலைவணங்கி ஒருமூலையை நோக்கிச் சொல்லுமிருப்போலே சொல்லுகிறூர்.

இராகம்.புன்னுகவராளி-ஆதிதாளம்.

பல்லவி

ஐயேமெத்தக்கடினம்-உனக்கடிமை
ஐயேமெததக்கடினம்

அநுபல்லவி.

பொய்யாத பொன்னம்பலத் தையாயிருக்குமிடம்
ஐயாதமனிதர்க்கு வுய்யாதுகண்டுகொள்ளும்

சரணங்கள்.

பாலகிருஷ்ணன்பணிந்திடுஞ் சீலகுருசிதம்பரம்
மேலேவைத்த ஆசையாலே-காலனற்றுப் போவானென்று
சாத்திரம்-நல்ல-க்ஷேத்திரம்-நிற் பாத்திரம்ஞானநேத்திரங்கொண்டு

வாசியாலே மூலக்கனல் வீசியே சுழன்றுவரப்
பூசைபண்ணிப் பணிந்திடு மாசறக்குண்டலியைவிட்
டாட்டுமே-மனமூட்டுமே-மேலோட்டுமே-வழிகாட்டுமே-இந்த

மானுபி மானம்விட்டுத் தானுகி நின்றவர்க்குச்
சேனுதிபதி போல ஞானுதி பதியுண்டு
பாருமே-கட்டிக்காருமே-உள்ளே-சேருமே-அதுபோதுமே-அங்கே

சங்கையறவேநின்று பொங்கிவரும்பாலுண்டு
அங்கமிளைப் பாறிக்கொண்டு தங்கபொம்மை போலவே [இந்த
நில்லுமே ஏதுஞ்சொல்லுபே ஞானஞ்சொல்லுமேயாதும்வெல்லுமே

அஷ்டாங்கம்பண்ணினுலு மெட்டாங்குபண்ணியது
கிட்டாது கிட்டவர வொட்டாதமுட்டியது
பாயுமே-முன்னே-தேயுமே-அது-வோயுமே-உள்ளே-தோயுமே வேத

மந்திரத்திலேபோட்டு யெந்தரத்திலேபார்க்குந்
தந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலே-அவ
தானமே-அது-தானமே-மவுனமே-பேசா-மோனமே-அந்த

முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவர்க்கு
இப்பார்வைகிடையாது அப்பாதிருநடன
மாடுவார்தாளம்போடுவார்-அன்பர்-கூடுவார் இசைப்பாடுவார்இதை

கண்டாருங்கிடையாது விண்டாருஞ்சொன்னதில்லை
யண்டரண்டகோடியெல்லா மொன்றாய்ச்சமைந்திருக்கு
மல்லவோ-பறையன்-சொல்லவோ-அங்கே-செல்லவோ-னோமாகுத
[ல்லவோ

விருத்தம்.

வானமேவிய வும்பர்கள் வாழத்தியு மறையைக்
கானமேசெயும் வேதிய ரேயுமக் கடுமை
ஈனமாமிழி குலத்தினி லெய்திய நந்தன்
ஞான மாரிகொண் டேயவ ரருளுற நினைத்தார்.

வசனம்.

இப்படி நந்தன்சொல்ல வேதியர்கேட்டு திவ்வியஞானமடைந்து நந்தனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

இராகம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

சிதம்பரம்போய்நீ வாருமையா நான்
செய்ததெல்லாமபசாரமையா (சிதம்பர)

அநுபல்லவி.

சிதம்பரம்போவீர் பதப்பெறுவீர்வேறே
சிந்தனைவேண்டாம் நந்தனேயினிமேல் (சிதம்பரம்)

எத்திசையிலுமக் கிணைசொல்லவும்போமோ
பத்தியேமுதலென்று பழகியபெரியவர் (சிதம்பரம்)

சித்தமும்தெளிந்து தெய்வமேநீரென்று
புத்தியும்வந்தது பொய்யிதுவல்லவோ (சிதம்பரம்)

வசனம்.

இப்படிச்சொல்லிய வேதியரை நந்தனார்சுற்றிவந்து தலைவணங்கி ஒடுங்கி வணக்கத்துடனே தூரவிலகிநின்று வேதியரை ஆசிர்வாதம் பண்ணச்சொல்லுவார்.

இராகம்-ஓரடியிலிரண்டுவார்த்தை-துக்கடா.

| நந்தனர் | வேதியர் |
|---|---|
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| சென்மசாபல்யமாமோ | ஆகும் |
| பதம்பெறுந்தவநெறியறிகிலேன் | அறிவீர் |
| பரமசிவனருள்செய்வாரோ | செய்வார் |
| சாதியில்தாழ்ந்தவனல்லவோ | அல்ல |
| சாத்திரமுறைமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியம்பலதெய்வம்நாடுமோ | நாடும் |
| ஆனந்தமடைவேனோவையரே | அடைவீர் |

வசனம்.

வேதியர் நந்தனருக்காசிர்வாதம்பண்ணி யனுப்பியபின்பு நந்தனருடைய குணாதிசயங்களைக் கொண்டாடுவார்.

விருத்தம்.

அடியவர்கள் மனமிடியப் பேசினதுண் டபாத மனந்தங்கோடி
படுநரகில் வீழ்வாரென் றெனவுரைக்கும் பாவமது பலித்ததென்று
துடிதுடித்து தொடைநடுங்கி நீர்வடித்து சிதம்பரத்தே துதிசெய்து
படிபுகழுந் திருத்தொண்டர் குணமெல்லாமுலகறியப் பகருவாரே.

இதுவுமது.

சாத்திரக்குப்பையெல்லாந் தள்ளினேன்பதறுபோலே
காத்திரஞ்சுத்தமாச்சு கனிந்திடுமுள்ளம்பத்தி
மாத்திரமிருந்தாற்போது மற்றொன்றுமில்லைசைவ
க்ஷேத்திரமுழுதுஞ்சுற்றிச் சேருவேன்றில்லையென்றார்

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்

பல்லவி.

எந்தநேரமு நந்தனேசிந்தித்தா
னந்தமாகி யிருந்தனாந்தனார்

பந்தந்தீரவே யிந்தவுருவாகி
வந்துதோவாந் தந்துதோசிவனென்று

வசனம்.

விட்டுதோ இந்தவீட்டுக்கவலைகள் பட்டுதோ பவசாகரஞ்சோ நித்திட்டுதோ முத்திவெள்ளங் கரைபுரண்டிட்டுதோவென்று எத்தி தொழுது எந்தநேரமும் வேதியரிப்படியே சிவபக்தி பண்ணிக்கொண்டு ஆனந்தமடைந்தார் அப்படியிருக்க நந்தனர் ஆதனூரைவிட்டு சிதம்பரம்வருகிறார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

நந்தன்சிதம்பரம்வருகிறார் ஆதனூரைவிட்டுக்
கொள்ளிடந்தாண்டி யப்பால்வருகையிலே
தொண்ட-ரங்கம்பரவசமாய்-எங்கும்-பொங்கிச்சிவமயமாய் (நந்த)

அந்தக்கரணவிருத்தியழிந்து
அனேகசென்மவாசனையை
யனல்கொண்டுதகித்தாரே-சஞ்சித-விதையென்றுவெறுத்தாரே ()

குண்டலிசத்தியைக்கொண்டு
இளம்பிமண்டலம்புகுந்து
சஞ்சரித்துக்கொண்டார்-குறையா-வமிர்தமுண்டார்கிளையார் (நந்)

அநாதிமாயகற்பிதமிந்த
நாமரூபாதிபிரபஞ்சமெல்லா
மழிந்துபோமென்பார்-குறைகட-லெழுந்தறுரைபென்பார் (நந்த)

சைவத்தலங்களிற் றெய்வமிதுவே
சத்தியம்பண்ணுவேன் நான்பறையன்
சதுர்மறைகேட்டிலையோ-மிக்க-ஷண்மதங்கேட்டிலையோ (நந்த)

எப்போதுநடராஜமூர்த்தியின்
இணையடி தொழுதார்க்கிடுரை
இந்திரபதங்கரோ-திரும்பியும்-வந்தவர்காண்கிலரோ (நந்த)

ஈசன்கருணைநேசமிலாதவ
னெத்தனைவேதங்கற்றாலு
மொட்டாப்பெருங்கொம்பு-நெருங்கித்-தொட்டால்செங்கரும்பு ()

ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடகமாடுவாரோ
அருந்தவம்புரிந்தேனோ-கனவில்-வருந்தியுமிருந்தேனோ (நந்த)

அரகரசாம்பசதாசிவனைபொன்
னம்பலத்தாடியதேசிகனை
ஐயையுன்னடிமை-மனது-னையுன்னடிமை (நந்த)

செழித்துவிய னுலகெட்டிச்சிகரங்க
ளோங்குந்தெரியுதுகாணையே
தில்லைத்தலமென்பார்-அன்புடன்-சொல்லப்பலமென்பார் (நந்த)

குதிப்பாரொருதரங்களிப்பார் கண்ணீ
ருதிப்பாரானந்தலாகிரியால்
கொண்டாடிப்பாரே-குரவை-நன்றாய்ப்படிப்பாரே (நந்த)

பாரளந்தகோபாலகிருஷ்ணன் துதி
பாடுந்திருவடிபணிவேனே
பரகதியடைவேனோ-பூமியில்-மறுபடிவருவேனோ (நந்த)

வசனம்.

நந்தனார் ஆதனூரைவிட்டுக்கொள்ளடத்தில்வரும்போது சொல்லுகிறார்.

இராகம்-முகாரி-அடதாளம்.

பல்லவி.

கொள்ளடக்கரைபோனான்-நந்தன்
கோபுரங்களைக்கண்டான்

அநுபல்லவி.

பள்ளச்சாதியிலும் பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர் வெள்ளங்கரைபுரள (கொள்)

சரணங்கள்.

ஓடத்தின்மேலேறி-நந்தன்-ஓங்குமகிழ்ச்சிமீறி
நாடவெவரும்நல்ல நடனக்கூத்தாடியே
நண்புடன்கதிபெற லாமென் றுறுதிகொண்டு (கொள்)

அக்கரைபோனானே-நந்தன்-ஆனந்தங்கொண்டானே
சிக்கெனவேசிவ சிதம்பரேசனைக்காணச்
சிந்தைமகிழ்ந்துசிவ தியானஞ் செய்துகொண்டு (கொள்)

திருவாதிரைத் திருநாள்-செய்யுந்-தினமல்லவோயிந்தநாள்
திருநடராஜமூர்த்தி திருமுகந்தனைக்காணச்
சித்தங்களிப்பேனு னென்றுறுதிகொண்டு (கொள்)

வசனம்.

இந்தப்பிரகாரந் தோத்திரஞ்செய்து கொள்ளடக் கரையைத் தாண்டிவரும்போது தில்லைக்கோபுரத்தைக் கண்டு தெரிசனம்பண்ணுவார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

கோபுரதெரிசனமே-எந்தன்பாபவிமோசனமே.

அநுபல்லவி.

தாபங்கள்மூன்றுந் தணித்துவிடுவோம்நல்ல
சோபனமுண்டாம் சோதிவிளங்கிய (கோபுர)

சரணங்கள்.

விண்ணளைந்துமே மேலோங்கியதுகண்டு நற்
கண்ணுளார்க்கெல்லாங் காக்ஷியளித்திடும் (கோபுர)

அல்லும்பகலு மமரர் துதித்திடுந்
தில்லைக்கிறையோன் றினமுமகிழ்ந்திடும் (கோபுர)

வசனம்

நந்தனர் தில்லைத்தலமிப்படியிருக்குதென்று சொல்லுகிறார்.

இராகம்-நவரோஸ்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

மாங்குயில்கூவியசோலைகளும் வாபீட்சகூபதடாகங்களுந்
தூங்கதிர்மண்டலமெத்தையுஞ் சொர்ணசபேசன்துஜமாமும்
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிசித்திரமண்டபமும்
சிலமுறுந்திருவீதிகளுந் தில்லைவேதியர்மாளிகையும்.

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன்-என்கவலையெல்லா மொழிந்தேன்.

அநுபல்லவி.

மண்டலம்புகழுஞ்சபேசன்சந்நிதி வாழ்த்திப்பணிந்து நின்றேன்.

சரணங்கள்.

தஞ்சமென்றடைந்தே-னிந்தச்-சடலத்தால்நொந்தேன்
அஞ்சவேண்டாமென்றொருதரஞ்சொல்லி அதைத்தரலாகாதோ(க)

அப்பாவுன்சரணம்-தில்லைக்-கரசேயுன்சரணம்
ஒப்பாரில்லாநாடகம்பயிலு மொளியேவுன்சரணம் (கண்டேன்)

வசனம்.

கோபுரதெரிசனமே என்கிறகீர்த்தனமுதற்கொண்டு சிதம்பர விலாசமென்றுபேர்.

சிந்து.

சிவன்-வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே அறியாதுபோ யிருந்த-செம்பொன்-னம்பலத்தாடியைக் கும்பிடவே-ஆதனூர்தனி யிருந்து-விடும்-அம்புபோலப்பறந்-தையமின்றித் தில்லையருகில் வந் தார்-மனந்-தேறிக்கொண்டார்குறையாறிக்கொண்டார்-கெண்டாம ணியோசை.

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

நாளைப்போ வேனென்று நாங்கள்சொல்லத் தெரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப்|போவாராய்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியி னின்றுபோய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை மருங்கணைந்தார்.

வசனம்.

நாளைப்போவே னென்றுசொல்லி அனேகநாள்கழியச் சபாநா தரைத் தரிசனம் பண்ண வேண்டுமென்னும் ஆசையை அடக்கக் கூடாதவராய்ப் பூளைப்பூவையொத்த நிலையாமையை உடைய பிறப் புகளால் உண்டாகிய சம்பந்தம் நீங்கும்பொருட்டுப்போகின்றவரா ய்ப்பாளையை உடைய பொலிவாகிய கமுகமரங்கள் சூழ்ந்திருக்கும் பழமையுற்ற தம்முடைய ஊரில் நின்றும் புறப்பட்டு ஆண் வாளைமீ னானது எழும்பிவிளையாடும் வயல்களையுடைய சிதம்பரத்தின் எல் லையையடைந்தார்.

இராகம்-காகரப்பிரியை-ரூபகதாளம்.

கெண்டாமணியாடுது-கண்டுபிணிவாடுது

முத்திமணிதேடுது நாடுது-கூடுது (கெண்டா)
பரவசமாகுது பாவங்கள்போகுது (கெண்டா)
செனனமரணாதிகள் மோகமுந்தீர்ந்தது (கெண்டா)

சிந்து.

கெண்டாமணிவோசை-காதில்-கேட்குதென்றாரதைப் பார்க்கவென்றே-கொண்டாட்ட மாகிவந்தார்-கையைக்-கும்பிட்டுடன்நமக் கம்பிட்டதோ-வென்றேமனமகிழ்ந்தார்-திரு-வீதியிலேவந்துகாதலுடன்-கண்டார் கலையாறி இரு-கண்களி லானந்தம் பொங்கிடவே-நின்றார் மதிற்புறத்தே-வெகு-சேத்தியென்றாரிதைப் பார்த்ததில்லை பணிந்தார்பரவசமாய்-நல்ல-பாக்கியசாலிக ளாக்குமென்றார்-இதுதானோ தில்லைப்பதி.

நந்தனார் தில்லையைக்கண்ட வானந்தானுபூதியைச் சொல்லுகின்றார்

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

| | |
|---|---|
| தில்லைதலத்தைக் கண்டார் | இது-சித்துவிலாசமென்றார்-அந்த |
| எல்லையிலே நின்றார் | மனதேகமாகிக்கொண்டார்-இரு |
| கண்களில்நீர் வடித்தார் | கொடுங்காமவலைபறுத்தார் |
| கரமிரண்டையுங் குவித்தார் | தன்காலைக்கோணிக்குதித்தார்-இந்த |
| ஐம்புலன்களை மறந்தார் | பரமானந்தக்கடலுறைந்தார்-தன் |
| தேகபத மறந்தார் | தில்லைச் சிவனே யென்றிருந்தார் |

இராகம்-பிலாகு-ஆதிதாளம்

பல்லவி.

இதுதானோதில்லைத்தலம்-இத்தனைநாளுமறியேன்
இதுதானோதில்லைத்தலம்

அநுபல்லவி.

அதுவோ இதுவோவென் றலைந்திடும்பேயனைக்
கதிதருவேனென்று கைகாட்டியழைக்குது (இது)

சரணங்கள்.

காசினியிலிதை கயிலையென்றெல்லோரும்
பேசக்கேட்டதேயன்றி பேணிப்பார்த்தறிகிலேன் (இது)

வசனம்.

நந்தனார் தில்லையைக்கண்டு கொண்டாடுவார்.

இராகம்-இந்துஸ்தான்-காபி-ஆதிதாளம்.

பல்லவி.

தில்லைதில்லையென்றால் பிறவி
இல்லையில்லையென்று மறைமொழியும் (தில்லை)

அநுபல்லவி.

தொல்லைத்தொல்லையென்றகொடுவினை
வல்லைவல்லையென்றகலுந்திருத் (தில்லை)

சரணங்கள்.

கற்றோங்கற்றோங்களங்கமறுந்திட
பெற்றோம்பெற்றோம்பேசாப்பெருமையி
லுற்றோமுற்றோம்பொன்னம்பலத்தினில்
தத்தோந்தத்தோமென்றுநடனமிடும் (தில்லை)

வாடிவாடியேமாலயனிருவரும்
கூடிக்கூடிகொண்டல்லும்பகலுந்தான்
தேடித்தேடித்திருவடிமுடிகளைப்
பாடிப்பாடிக்கோபாலகிருஷ்ணன்தொழும் (தில்லை)

துக்கடா- இராகம்-தேசிகதோடி- ஆதிதாளம்.

பல்லவி.

இதுவோதில்லைச்சிதம்பரக்ஷேத்திர-மீசனிருப்பிடமோ

அநுபல்லவி

மதுரம்பொழிந்திடும் மறையோரிருப்பிடம்
மாமுனிவர்தவம் வாழும்பெருமிடம்
பதவிபெறுந்தொண்டர் பணிந்துவருமிடம்
பலதெய்வமுந்தொழும் பரகதிதருமிடம் (இது)

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடுஞ்சிதம்பரமோ-வையன்கூத்-தாடுஞ்சிதம்பரமோ

அநுபல்லவி.

ஆடுஞ்சிதம்பர மன்பர்களிக்கவே
நாடுஞ்சிதம்பரம்நமச்சிவாயப்பொருள் (ஆடுஞ்)

சரணங்கள்.

ஆருமறியாமல்அம்பலவாணனார்
சீரடியார்பார்க்கச் சேவடி தூக்கியே (ஆடுஞ்)

பாலகிருஷ்ணன்போற்றும் பனிமதிசடையினார்
தாளமத்தளம்போடதாதெய்தாதெய்யென்று (ஆடுஞ்)

விருத்தம்.

தில்லையைக் கண்டபோதே தெளிந்துதென் னுள்ள மெல்லாம்
பல்லூழி காலஞ் செய்த பாழ்வினை தூலந்து போச்சு
நல்லரு ணடனங் காட்டும் நாயனார் சிற்சபைக்குள்
சொல்லுவார் மகிமை செப்பச் சேடனு லாகா தென்றே

வசனம்.

இப்படியே தில்லையைக் கொண்டாடி தில்லையைப் பாராதவரே பாவியென்றார்.

இராகம்-சவாயி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

மார்கழி மாதத்தி லாதிரை நாளையில் வந்து சிதம்பர தேசிகனை பாராத பாவிகட் கேதுமில் லையிந்தப் பாரில்வந் துபிற வாதவரே வானிற் றெழுந்திரு மாளிகை மண்டப மாமதிலுந்தில்லை மாநகரம் காணக் கிடைக்காதப் பாயிந்த பாக்கியங் காதிற்கேட்டவண்ணங்க ண்டதுவே, ஆதிபராபரமாகிய தில்லைப்பொன் னம்பலவன்வளர்சந் நிதியில், நாதமுங்கீதமுங் கேட்குதுவானந்த நாடகவேளையை நா னறியேன்.

நந்தனார் சிதம்பரங்காணுததால் சிவலோகங் காணுரென்பார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

சிதம்பரம்வந்து தெரிசியாதசென்மம்வீணென்றுபேசி
மனதிலெண்ணினர் பாதகமலத் தியானம்பண்ணினர்
பறையனுக்குமிந்ததலத்தைப்பார்த்தபின்புமோட்சபதவி
பலித்துதல்லவோ பாவிச்செனன மறுத்துதல்லவோ
தொண்டுகொண்டதங்களையர் பெருமையெல்லாம் சொல்லிச்சொல்
துள்ளித்தாவினர் ஞானவிரையை யள்ளித்தூவினர் [லித்
பூதலத்திலிதுவேதெய்வமென்றுநந்தனுனந்தக்கடல்
பொங்கிப்பாடினர் புண்ணியத்தல மென்றுதேடினர்.

இராகம்-தண்டகம்-சாப்புதாளம்.

அரகரசங்கர வண்ணலேயம்பலத்
தானேநானுந்த னடைக்கலமென்று
உருகித் துதியாரோ-வானந்தம்
பெருகிப்பதியாரோ

முத்தியளிக்குந்திரு மூலத்தானரைக்கண்டு
பத்திபண்ணுதவன் பாமரனல்லவோ

பாருக்குச்சுமையாச்சு-அவனிருந்து
யாருக்குச் சுகமாச்சு

மங்கையர்மோகமாய் மயங்கித்தினந்தோறு
மங்கம்புளகிதமா யவரிடுமேவல்கொண்

டாழிக்குழைத்தாரே-அன்யாயமாய்
நாளையுங் கழித்தாரே

வீசிநடைநடந்த மெய்யும்பொய்யாகவே
ஓசையடங்கும்போ தொருவருமங்கில்லைத்

தூசியும்போகாதே-காதறுந்த
ஊசியும் வாராதே

சிவசிதம்பரமென்று தில்லைவெளியினின்று
பவசாகரம்வென்று பரமபதமடையும

தவநெறிபொருந்தாரே-பொருந்தின
மவரையும் வருந்தாரே

சாத்திரங்கற்றாலுஞ் சதுர்மறையுணர்ந்தாலுஞ்
சூத்திரம்பெற்றாலுஞ் சொன்னேனகங்கார

மாத்திரம்போசாதே-கருணைக்குப்
பாத்திர மாகாதே

சரணாகதமென்று சார்ந்தடி பணியாமல்
வருணாச்சிரமவிதி வழுவாதிருக்கினுஞ்

செனனாதிகள்விடுமோ-சிரவண
மனனாதிகள் யடுமோ

அஷ்டசித்திகள்பெற்று வாண்டாயிரங்காலம்
மட்டிருந்தாலுமென் மரணபயமெய்திடும்

நஷ்டசென்மமாச்சே-மனிதசென்ம
மெட்டிவீணாய்ப்போச்சே

மூப்பிரூழுந்தாண்டி மூலத்தீமுட்டிக்கொண்
டப்பாலேநின்று லானந்தங்காணலா

மொப்பாரில்லையடா-ஊடுருவி
கிற்பா ரில்லையடா

ஆலமிடறடக்கி யம்புலக்கூத்தன்கோ
பாலகிருஷ்ணன்தொழும் பரமசிவனையென்று
பாடிப்படியாரோ-பருவத்தில்
தேடிப்பிடியாரோ

வசனம்.

நந்தனர் சிவபத்தி பண்ணாதவனை நிந்தனைசெய்து இன்னமுஞ் சொல்லுவார்.

இராகம்-சுருட்டி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

வானோர்புகழ்தில்லை வனநாதர்வாழும்
ஞானசபையைப்போற்றி நமச்சிவாயவென்று
சொல்லாதவன்-கல்வி-கல்லாதவன்-வெகு-பொல்லாதவன்

காசினிபுகழ்சிவ காமவல்லியைக்கண்டு
பாசமகலும்நெறி-பாராதவன் சுத்தப்
பதருச்சு-ஆட்டி-னதருச்சு-கிருமிக் கெதிராச்சு

ஆட்டுக்காலைச்சற்றே கேட்டுவாங்கியுள்ளே
நாட்டிக்கொள்ளாதவன் மாட்டுக்குவமையென்று
நாடாரே-கண்டு-கூடாரே-என்றுந்-தேடாரே

அம்பலவாணனை யருகில்வந்துகையால்
கும்பிட்டிறைஞ்சாத குருடர்களுக்குத்திற
மதியேது-பரகதியேது-பண்ணும்-விதியேது

நாக்கிருந்துஞ்சிவ நாமத்தைநவிலாமல்
சாக்குப்போக்குப்பேசுஞ் சண்டிபவனைக்கால
னடியானே-கட்டிப்-பிடியானே-கையா-விடியானே

வேதாந்தநூற்களை விவகரித்துணர்ந்தாலும்
ஏகாந்தபத்தியொன் றில்லாதவனுள்ள
முருகாது-கள்ளங்-கருகாது-வெள்ளம்-பெருகாது

ஆத்திமதியஞ்சடை யழகனாடியகூத்தைப்
பார்த்துக்களிக்காத பாவிமனிதர்க்கொன்றும்
பலியாது-வினை-சலியாது-சிலம்-பொலியாது

பாலகிருஷ்ணன்தேடும் பாதசரத்தைக்கண்டு
சீலமுடனேயுண்டு செபிக்காதவன் துன்பம்
துலையாது-இன்பம்-நிலையாது-கன்மம்-கலையாது.

வசனம்.

நந்தனர், சிதம்பரம் பாராதகண்படைத்தாரைமுகத்தைகெடுக்கவந்த புண்படைத்தாரென்று சொல்லுவார்.

இராகம்-ஆனந்தக்களிப்பிலே ஒருபேதம்.

காணு கண்ணென்ன கண்ணோ
வீணனகண்மயிர் கண்ணதுபுண்ணோ (காணத)

சொல்லும்பொருளிறந்ததரியவடிவமாகி
பல்லும்பகலுமற்றவானந்தபேரொளி (காணத)

பசியாமருந்தளிக்கும்பரமரகசியத்தி
லசையாமலேயாடுமம்பலநாதனைக் (காணத)

ஊராருமறியாமலொளிகண்டுபிசகாமல்
ஈராருகாற்கொண்டெழும்பியமண்டபம் (காணத)

அண்டத்துளடங்காதவாசைவலையைப்பூட்டி
பிண்டத்துளடங்கியபேரின்பதெப்பத்தைக் (காணத)

என்னையானறியேனென்றிகழ்ந்திடும்பேயனை
தன்னந்தனியனுக்கித்தருவனென்றழைத்தாரைக் (காணத)

சோற்றுத்துருத்தியிதைச்சுமந்ததினுலென்ன
ஆத்திமதியுஞ்சடையழகனமருங்கோயில் (காணத)

சிலக்கமலமுகச்சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன்றில்லைக்குழகனுடியகூத்தைக் (காணத)

பாலகிருஷ்ணன்தொழும்பாதத்தைப்பணிந்தொரு
நாளிலும்பிறவாதநலமிக்கவழிதேடி (காணத)

வசனம்.

நந்தனர் பத்திபண்ணுதவன் முத்திபெறுனென்று சொல்லுகிறார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

வேதம்படித்ததுவும்சாஸ்திரங்கற்றதுவும் மெய்யினில்நீறுபூசுவதும்
ஆதிசிதம்பரதேசிகன்திருவடிக் காளானலன்றனந்தம்
உடனேதலையும்பவபந்தஞ் சொன்னேன்சொன்னேன் சொன்னேன்
ஊணுறக்கமுதலாகியநான்குமுண்டேயுலகில்யாவருக்கும்
ஆணவமலநீத்தார்களறிவாரகத்தைச்சுருக்கிக்கொள்ளுவாரே
சகத்தைப்பொய்யாய்த்தள்ளுவாரே சொன்னேன்சொன்னேன்சொ

 [ன்னேன்

அருந்தவமுனியாகினும்! நல்லாராசைபொல்லாரறியாரோ
வருத்தப்படுத்திமனதைமயக்கி வைத்திடுமென்னமயக்கோசம்
உற்றுப்பார்த்தாலதுமோசம் சொன்னேன்சொன்னேன்சொன்னேன்
அரவணைகோபாலகிருஷ்ணனல்லும்பகலும்பணிந்தேற்றும்
திருவடிசரணாகதமென்றெண்ணித்தெளிந்தார்க்கன்றோபரபத்தி
ஒழிந்தார்க்கன்றோவாமுத்திசொன்னேன்சொன்னேன்சொன்னேன்

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இப்பரிசாயிருக்கவெனக் கெய்தலரிதென்றஞ்சி
யப்பதியின்மதிற்புறத்தி னாராதபெருங்காத
லொப்பரிதாய்வளர்ந்தோங்க வுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லை வலங்கொண்டுசெல்கின்றார்.

வசனம்.

இந்தப்பிராமணர்களுடையவீடுகள் இத்தன்மையாயிருக்க, எனக்கு அவ்விடத்திற்குப்போகுதலரிதென்று பயந்து அந்தஸ்தலத்தின் மதிலின்புறத்தில் அளவற்றபேரன்பு சமானமில்லாமல்வளர மனமுருகிக் கும்பிட்டுக்கொண்டு சொல்லுதற்கரிய எல்லையை வலஞ்செய்துக்கொண்டுபோவார்.

விருத்தம்.

அம்மையாந்தில்லை மாநகர்மருங்கிடையணைந்து
சும்மையிட்டிரு விழிகளில்நீரறச்சொரிந்து
விம்மியேசிவனார்சரி தங்களைவிரித்துக்
கொம்மைவிட்டவர்பாடியு மானந்தங்கொண்டார்.

வசனம்.

நந்தனார் தனக்கிந்தபாக்கியங் கிடைத்ததென்று கொண்டானடிக்கிறார்.

இராகம்-உசேனி-ரூபகதாளம்

பல்லவி.

கொண்டானடிக்கிறார்-தில்லைக்
கோயிலைக்கண்டுதாவித்தாவி (கொண்)

அநுபல்லவி.

அண்டாண்டந்தொழு மம்பலநாதனைக்
கண்டாரைக்கண்டுகொண்டோமென்றுநன்றாய் (கொண்)

சரணங்கள்.

அஞ்சலிகொண்டுகளித்து அரகரவென்றுசபித்து
குஞ்சிதபாதத்தைத்துதித்துக் குரவைகள்பாடிகுதித்து(கொ)

அங்கம்பரவசமடைந்து ஆனந்தக்கடலில்விழுந்து
பொங்கிச்சிவமென்றறிந்து புலியதிர்ந்துபணிமிகுந்து (கொ)

இருகண்களில்நீர்பெருக இறைஞ்சிமனதூடுருக
அருமைச்சிவகதிதருக அம்பலவாணன்வருக (கொ)

இதுவுமது.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

கொண்டானடித்தாரே-நந்தனார்கோயிலைக்கண்டுதாவித்தாவிக்
கொண்டானடித்தாரே.

அநுபல்லவி.

அண்டர்மகிழ்ச்சியாலே அரனேயென்றுமென்மேலே (கொண்)

சரணங்கள்.

பண்டுநான்செய்தே யோகம் அதனாலுருக்
கொண்டுவந்தேன்மானிட தேகம் ஆகவேஇந்தப்
புண்டரீகப்பதவை போகம் கண்டேனென்போல
மண்ணிலெவருக்குண்டு யோகம் என்றுதுதித்துக்
கொண்டாடுமிவர்புகழைக்
கூறவருமேயுச் சாகம் (கொண்டா)

வஞ்சமனதையொரு மித்து நினைத்தொழாத
பஞ்சபாதகப்பே ரெடுத்து உலுத்தர்களைக்
கெஞ்சியவர்களைய டுத்து உழலாமலே
கஞ்சமலர்ப்பதங்கொ டுத்து ஆண்டருளென்று
வஞ்சிசிவகாமிதொழும்
மணவாளனைத் துதித்துக் (கொண்டா)

வருவார்திரும்புவார் களிக்க சிரசின்மேலே
இருகைகுவித்துவாழ் வளிக்க வேண்டுவாரிந்தத்
திருநாளைப்போகுவார் மிகுக்க ஆகையாலிந்தப்
பெருவாழ்வடைவாரிவர்
பேதமில்லையே யுரைக்கக் (கொண்டா)

வசனம்.

இப்படிநந்தனார் வீதியைச்சுற்றிசந்நிதியில்வந்து தடிவிழுந்தாற்போலுடல்படியப்பணிந்து புழுதிபடப்புரண்டு ஆனந்தமடைந்து நிருத்தசபைதெரிந்து தெரிசனம்பண்ணுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்

சபாதெரிசனங்கண்டான் நந்தனுஞ்
சுபாவமுடனேநின்றான்
சபாதெரிசனங்கண்டான்-கணிதபி
ரபாவமாகிய சபாபதியிருக்கும் (சபா)

சதாகாலமும்வேதங்கதி மொழிந்திடுஞ்
சிவாகாரமாய்ச்செழித்து வளர்ந்திடுந்
தில்லைமூவாயிரமுனிவர்கள்கூடும்
அல்லும்பகலுமவரவர்நாடும் (சபா)

வசனம்.

நந்தனார்தெற்குவீதியில்நின்று சபாபதியைநோக்கிதுதிபண்ணுவார்

இராகம்-செங்கலா-ஆதிதாளம்.

பல்லவி.

ஜெயஜெகதீசா-அதிசுந்தரகுஞ்சிதபாதா-ஓ-ஜெகதீசா

அநுபல்லவி

தில்லையைக்கண்டேன் தேறித்தெளிந்தேன்
எல்லையில்நின்றே னினிப்பிறவேன்காண்
எனக்கினியாரீடுகரும்புபோ லினிக்குதுபார்விடு
ஆசாபாசத்தைவேறரவெட்டி யானந்தத்தின்முழுகாட்டி
வைக்குமிதுயாருக்குங்கிடையாது-இந்தசுகம்பாருக்குளிணையேது
சரணாந்தமென்றிங்கேவந்தேன் சாமிபராக்கு
உமையடைந்தேன் ஜெனனாதிகளான் மிகநொந்தேன்
வேறொருதெய்வங்களைவருந்தேன் (ஜெய)

சரணங்கள்.

தென்றிசைக்கோன்வந் தழைத்திடும்வேளையில்
பெண்டுபிள்ளைகள் பேயோட்டம்
ஓடத்திலேறியபெருங்கூட்டம்
நானும்நமனுந்திண்டாட்டம் ஒருநம்பிக்கைதாரும்

நாளுனக்கருள்புரிந் தாளுவேனென்று
கனவிலாகிலும்வாருந் தட்டியெழுப்பிக்கவலைகளைத்தீரும்
அடிமையென்று மனதுமகிழ்ந்துபாரும்
தில்லைவெளியில்வாடாவென்றுசேரும் ஓய் (ஜெய)

அரகராசங்கரனே பொன்னம்பலத்தாண்டவனே
பரமதயாமூர்த்தியென்றடிபணிந்தேன் மனங்களித்தேன்
சாதியில்சின்னவனானல்முன் வீதியில்வந்தேனாகாதோ
பாதகஞ்செய்யினும் சிதம்பரமென்று
பகர்ந்தால்பழவினைபோகாதோ
தீதிலாப்பெருந்தவத்தார் வந்தால்
தெரிசனஞ்செய்வேன் போகாதோ
ஆதிபராபரமாகியவுனைக்கொண்டாடுவேன்
பாடுவேன்தேடுவேன்நாடுவேன் (ஜெய)

அபாரமாகியசமுசாரம் சதாவிஷயகரமதிகோரம்
உபாயமறிந்துகரையேறப் படாதுஜெகதீசரமாயை
விலாசகற்பிதமிந்தஜெகம் அநேகசஞ்சிதவாசனைகள்
சிவோகமென்கிறபாவனையால் நிவாரணம்பண்ணும்பெரியோர்கள்
பண்ணியதொழிலின்பயனறிவார்பாலகிருஷ்ணன்தொழுங்கழலணி
எண்ணியபடியேதவமுறுவார் எனதுனதென்றுமுறையிடுவார்[வார்
சமாதிபண்ணிபகமாதிக்கிருந்தியறுபடாதபேதமைகைவிடாதேயும்
சபாபதிவெகுகிருபாநிதியுன்பிரதாபமறியேன்சுபாவம்பறையன்[நீர்

விருத்தம்.

வாட்டுவாருடல் வேர்படதழலிடைவருத்தி
மூட்டுவார்மூலக்கனல் மதிமண்டலமுகட்டில்
மாட்டிறைச்சியை யருந்தியபுலையன்றன்மனத்து
ளாட்டுக்கால்சற்றே தந்திடுமம்பலத்தரசே.

இராகம்-இந்துஸ்தான்-காபி-ஆதிதாளம்.

பல்லவி.

தாதாரீயாடியபாதம்தத்தித்தெய் தத்தித்தெய்யென்றாடியபாதம்

அநுபல்லவி.

ஆதரவாகபதஞ்சலிமாமுனிக் கானந்தநாடக மாடுந்திருவடி (தா)
ஆகமவேத புராணங்களோதிய யோகிகளாலே தேடுந்திருவடி (தா)

சிந்தைமகிழ்ந்து குவிந்திடவேயதி சுந்தராஞ்சிதகுஞ்சிதபாதம்
பாரளந்திடுங்கோபாலகிருஷ்ணன் துதிபாடிப்பரவிப்பணியும்பாதம்.

நந்தனார் பிறவிபிணிக்கஞ்சி துதிபண்ணுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

அம்பலவாணாவுன்சரண மடைந்தேனேழை
ஆதரித்தாளுவதுன்பாரமல்லவோ சொல்லவோ
எடுத்திடுஞ்செனனங் கணக்கெழுதத்தலையாதென்பாடு
இன்னம்பிறந்திடுவேனோ நடேசனேயீசனே
ஆசையெனும்பெருங்காட்டிலேயரற்றும்முழுமூடன்
அகலவிடாதேயும்நம்பினேனுன்னையையனேமெய்யனே
பாரளந்தகோபாலகிருஷ்ணன்பணியுமலர்ப்பாதம்
பாவியென்னுள்ளுறவே கருணைபாருமேவாருமே.

வசனம்.

அம்பலத்தைநடனத்தைவருணித்துச்சொல்லுவார்.

இராகம்-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடியபாதா-இருவர்கள்-நாடும்விநோதா

அநுபல்லவி.

ஆடியபாதாவயனுமாலுந்தினம்
தேடியுங்காணுமற்றிரைமறைவாக
தித்தித் தித்தித் தித்தித்திமியென்று (ஆடியபாதா)

வீரவெண்டையஞ் சிலம்பசைந்திட
மேவுஞ்சடையும் புலியசைந்திட
சாருந்தொண்டர்கள் மனங்குவிந்திடச்
சாலோகாதிபதவியுந்
தந்தோந் தந்தோந் தந்தோந் தாமென்று (ஆடியபாதா)

வேதமுனிவர்கள் பாடவுஞ்-சன
காதியோகிகள் கூடவும்-வெகு
நாதமெங்கினுமூடவுந்-திரு
நந்திமத்தளம்போடவுந
தகுந்தகுந் தகுந்தகுந் தகுந்தகுந் தகுமென்று (ஆடியபாதா)

பாலகிருஷ்ணன் துதிகள்செய்திடப்
பண்ணவர்கள்பூ மாரிபெய்திடச்
சீலமுள்ளசிவகாமிமகிழ்ந்திடத்
திருச்சிற்றம்பலத்தாசனுந்
தாந்தாந் தாந்தாந் தாந்தாந் தாமென்று (ஆடியபாதா)

வசனம்.

நந்தனர் அடிமைத்திறங்காட்டிச் சொல்லுகிறார்.

இராகம்-தண்டகம்-ஆதிதாளம்.

அறிந்தறியாமலேசெய்ததபராதமையா-என்னை
ஆண்டவனேதில்லைத்தாண்டவராயா அடிமையுன்சரணம்
பருகியவண்டபகிரண்டங்கள் கடந்திடுமெத்தாவுன்சரணம்
பதஞ்சலிக்காகநடம்புரியுந்திரு வம்பலக்கூத்தாவுன்சரணம்
நடுவுமாதியுமந்தமுமொன்றுமிராத நிராமயனேசரணம்
பொங்குமானந்தக்கடலே வெளியேயறிவின்னறிவேயுன்சரணம்
என்றும்நித்தநிரஞ்சனநிஷ்கள நிர்க்குணரூபாவுன்சரணம்
கருதிநின்மகிமைகண்டோதரியாத கடையேனுன்சரணம்
எள்ளுக்குளெண்ணெய்போ லெங்குநிறைந்தயீசாவுன்சரணம்
எட்டிரண்டுமெறியாதவன் கனகசபேசாவுன்சரணம்.

வசனம்

இப்படியனேகவிதமாய்க்கொண்டாடி உட்புகுந்து தாண்டவம் பாராத குறைகொண்டு சுவாமியை நானுள்ளே வரவோ வென்று கேட்கிறார்.

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்.

பல்லவி.

வருகலாமோ-வையா-உன்ற
னருகில்நின்றுகொண்டாடவும் பாடவும் (வருகலாமோ)

அநுபல்லவி.

பரமகிருபாநிதியல்லவோ-யிந்தப்
பறையனுபசாரஞ்சொல்லவோ-உந்தன்
பரமாநந்தத்தாண்டவம்பார்க்கவேநானங்கே (வருகலாமோ)

பூமியில்புலையனாகப் பிறந்தேனே-நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன்சன்னிதி வந்தேனே-பவ
சாகரத்தையு மிழந்தேனே-கரை
கடந்தேனே சரண மடைந்தேனே-தில்லை (வருக)

வசனம்.

இப்படி திருநாளைப்போவாரென்னும் கீர்த்திபெற்ற நந்தனார்தி ல்லையில்வந்துகொண்டாடும் பத்திமார்க்கத்தை ஆதிசேடனாலும்வரு ணித்துச்சொல்லக்கூடாத பத்திஞானவைராக்கியசாஸ்திரங்கள் கு டியிருக்கும்ஊரின்பேர்சொல்லக்கேட்டறியாதபேதையாகியகோபா லகிருஷ்ண னென்னும் பெயர்கொண்ட என்னால் சொல்லத்தகுமா ஏதோநானுளறக்கூறியதால் பெரியோர்கள் பிழைபொறுக்கும் கட மையென்றுசொல்லி வணங்குகிறார்.

சிந்து.

இதுதானோதில்லைப்பதி-என்று-எக்கலித்தாராடிக்கொக்கலித்தார் ஐயாவுன்சந்நிதியைக்-காண-வாசைகொண்டுவந்தேனேசமுடன் தெருவில்பொடித்தூளை-அள்ளித்-தேகமுழுதினுந் தாகமுடன் தரித்தார்திருநீறாய்-நாலு-சாஸ்திரவேதங்கள் பார்த்துணரும் பெரியோரிருக்குமிடம்.

வசனம்.

நந்தனார் அந்தத்தில்லைத்தலமிப்படியிருக்குதென்று சொல்லு கிறார்.

இராகம்-செஞ்சுருட்டி-தண்டகம்-ஆதிதாளம்

ஆகமங்கள்வேதியர்கள்சிவனடியார்கள் கூட்டம்-மன
தேகமாகியெப்போதும்விளைகின்றயோகிமுனிக ளோட்டம்-பூ
லோகமிதுகைலாசமென்றுமிறைப்போற்றுவார்க ளாட்டம்-அதி
வேகமாகவெங்கேயாகினும்வெளியேபோகவேணு மையே
இங்கிருக்கலாகாதையே இங்கிருக்கலாகா தையே
பாவிப்பறையனிங்கேவரலாமோ சுவாமிதரிசனந்தர லாமோ
பாதகமலங்களைத்தொடப் போமோ
பாவமெனைப்பிரிந்துதொலைப் போமோ

நந்தருவினில் மந்திரங்களைச்சொல்லி „
வந்தனைகள்செய்து சிந்தைமகிழாத இந்த
வேதமறிந்தவர் பாதம்பணிந்தவர்
பேதைமறந்திடாத் தீதடைந்தேன்பாவி இந்த
பாவிப்பரையா னூரவிலகென்று
ஆவிதவித்திடப் பாரிலுரைத்திடும் இந்த

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்

பல்லவி

தில்லைவலஞ்சுற்றினார் சிதம்பரத் தெல்லைவலஞ்சுற்றினார்.

அநுபல்லவி.

தில்லைவலஞ்சுற்றினார் தேவருமறியாத
எல்லைவாசல்கடந் திருளறவேண்டி தில்லை

சரணங்கள்.

சாதிக்குறையைத்தானே சந்ததமுநினைந்து
வேதனைகொண்டுள்ளம் வெதும்பியேவாடி
பாதிப்பிறையணியும் பரமசிவனைக்கண்டு
போதமடைந்து பரிபூரணமாக தில்லை

மோகவலைக்குட்சிக்கி முழுமூடனாகவே
போகமேநிலையென்று புத்திகெட்டேனே
பாகனைவேண்டுடல் பரவசமாகியே
ஏகாரத்திற்றன்னை யிருத்திட்டுச்சுகிக்க தில்லை

ஓராறுதாண்டியே யுள்மணிக்கோட்டைகள்
சீராறுகாணாத சிதம்பரரகசியம்
ஈராறுகால்கொண்டு இருத்திப்புலன்றனையும்
பேராறுபெருகியே பெருவெளிகாண தில்லை

வ-ம் இப்படித் தில்லைத்தலத்தைவிடாமல் சுத்திவந்தால் தன்னிடம் சுவாமிவருவாரென்றும் மனதைப்பார்த்துச் சொல்லுகிறார்.

கீர்த்தனம்-இ-ம் யமுனைகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

வருவார்வருவார்மனமே மயங்காதிருசொன்னேன் சொன்னேன்
வேணதுதருவார்கருணைபுரிவார் திருவம்பலவன்
பரகதியுந்தருவார் சாதிபறையனென்றும் பாரார்பேதை
உறுதிகொள்ளவேணும் மெய்யன்புடன்
ஆகாறுவென்றொருதரஞ் சொன்னாலும்போதும் வருவார்

வ-ம். தன்னை இரட்சிக்கும்சமையம் இதுதானென்றுசொல்வார்

கீர்த்தனம்-இ-ம்-தனசரி-ஆதிதாளம்.

பல்லவி.

இதுநல்லசமையமையா ரட்சிக்க இதுநல்லசமையமையா

சரணங்கள்.

இதுநல்லசமையமையா வென்னைரட்சித்தாளும்
ஈமமகேசநடேசசபேசா இதுநல்ல

பாலகிருஷ்ணன்போற்றும் பதங்களைக்காண
சீலமுள்ளமுத்தி சேருவதற்கே இதுநல்ல

வ-ம். இவ்வளவு சொல்லியும் இரங்காமற் போகவேண்டியதென்னவென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

இரக்கம்வராமற்போன தென்னகாரணம்சுவாமி
கருணைக்கடலென்று யெந்தன் காதில்கேட்டு நம்பிவந்தேன்

சரணங்கள்.

ஆலமருந்தியண்டருயிரை யாதரித்தவுனதுகீர்த்தி
பாலகிருஷ்ணன் பாடித்தினமும் பணிந்திடும்நடராசமூர்த்தி
பழியெத்தனைநான்செய்கினும் பாலித்திடுஞ்சிதம்பரமென்று
மொழிகற்றவர்வழிபெற்றவர் கனகசபாபதியிப்படி

விருத்தம்.

அண்டானதியாவையும் வேள்விகளமைத்தும்
குன்றில்லாத்தவம் புண்ணியமாமலைகுவித்தும்
வின்றிடாமலேயீசன் றனக்களித்தவிவேகம்
மன்றுளாடியபாதத்திலே மனம்வருமே.

வ-ம். மகாபுண்ணியசாலிகளுக்கு முத்திவருமேயன்றி தனக்குஆகாதென்று சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தனசரி-ஆதிதாளம்.

சாதியில்தாழ்ந்திடும்புலையனுக்கும்பர கதியோ வேத
சாஸ்திரநான்கினுமோதறியாதது விதியோ

கண்டுகத்தைகளைவதைசெய்தருந்திய தேகம் மன்றன்
நடனதெரிசனங்காணவென்றாலதி ஞானம் செக
நீசனுக்கன்றோதெரியுமதவு பாயம்
சிதம்பரம்போவேனென்றுரையா பாவி-இந்த
ஜென்மமெடுத்து வீணாகத்தவிக்குதென் னாவி

வ-ம். இப்படிநான்ஈனசாதியாயிருந்தபோதிலும் உம்முடைய சரணாரவிந்தத்தில் வைத்தபுத்தியை மறந்தவனல்லவென்று சொல்லுகிறார்.

துக்கடா-இ-ம்-மணிரெங்கு-ரூபகதாளம்.

பல்லவி.

எப்படிகெட்டாலுந்தன் பொற்பதமறவேன்காணும் எப்படி

சரணங்கள்.

அற்புதமாய்தில்லை யம்பலவாணரேநான்
சொற்பனத்திலுமையன்றி மெய்ப்பொருளாகவும்வேண்டேன்
தப்பிதமெத்தனை செய்கினும்
கைப்பிடித்து ஆண்டுகொள்ளும் எப்படி

திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இவ்வண்ணமிரவுபகல் வலஞ்செய்தங்கெய்தரிய
வவ்வண்ணம்நினைத்தழுவ வடித்தொண்டரயர்வெய்தி
யவ்வண்ணத்திருமிடற்றுற் மன்றுநடுங் கும்பிடுவே
தெவ்வண்ணமெனநினைந்தே வேசாரிநெடுந்துயில்வார்.

வ-ம். இந்தப்பிரகாரம் இராப்பகலாகவலஞ்செய்துக்கொண்டு உள்ளே போகக்கூடாததன்மையைநினைத்து வருத்தப்பட்டஉயர்வு பொருந்திய் யடியவர் வேசாரி கரியநிறமுள்ள கழுத்தினையுடைய சுவாமி கனகசபையில் ஆடுகின்ற கூத்தை எப்படி தரிசிக்கலாமென்று விசனத்தோடும் நித்திரைசெய்வார் இப்படி நித்திரைசெய்து மறுபடியும் எழுந்து சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-கண்டா-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

விருதாச்சென்மமாச்சே விருதாச்சென்மமாச்சே
சதாகாலமுமையன் சந்நிதானத்திலிருந்து நிதானமாய்ப்பெறாமல் விரு

சரணங்கள்.

முத்தியளித்திடுமூர்த்தியைக்கண்டு
பத்தியைப்பண்ணிபதமடையாமல் விரு

பொற்கழலசையப்பொதுவிலிருந்து
நக்கராடும்பதந்தனைப்பாராமல் விரு

தில்லைக்கதிபதிதெரிசனங்கொடுத்து
எல்லையில்வாவென்றிரங்கியழைத்தும் விரு

வ-ம் தனதுபதவிக்கி யோக்கியனல்லவென்று தள்ளுவாரோகொள்ளுவாரோ அப்படி தள்ளினாலும்தில்லையிலேதானே என்தேகத்தை விடுவதேயன்றி திரும்பிப்போகமாட்டேனென்று சொல்லிப் புலம்புகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

தள்ளுவாரோஎந்தனைக் கைக்கொள்ளுவாரோ

சரணங்கள்.

தள்ளிவிட்டால்நான்போகேன் தனித்திருக்குஞ்சமையமல்ல
அள்ளிவிட்டேனன்பை அம்பலவாணனொருக்கால் தள்

எனதெனதென்றபிமான மிச்சையறும்நிஷ்டைபண்ணி
மனமிறந்ததூவெளியில் மருவாதபாவியென்றும் தள்

நாறுமிந்திரியப்பொய்யுடலை நானென்றெண்ணிநான்சுமந்து
தூறுபட்டதுன்பமெல்லாந் தொலைந்ததென்று இங்கேவந்தும் தள்

பாலகிருஷ்ணன்தேடிவரும் பாதமலர்காணேன்
வேல்விழியார்மோசங்கொண்டு விர்த்தியற்றமூடனென்று தள்

வ-ம் அடாயிதென்ன சென்மமென்று அத்தனது எல்லைசுற்றிவந்தார் இரவுபகலோயார் இவை ஈசன்கண்டு விசுவாசமுடன் பாலகிருஷ்ணன்பணியும் திருப்பாதமுள்ள தில்லைநாதனவன்கனவிலுருவாகியது.

விருத்தம்

இன்னல்தருமிழிபிறவி யிதுதடையென்றேதுயில்வா
ரன்னிலையையம்பலத்து ளாடுவாரறிந்தினிதில்
மன்னுதிருத்தொண்டரவர் வருத்தமெல்லாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண் முறுவலொடுமருள்செய்வார்.

வ-ம் இப்படி திருநாளைப்போவாரென்னும் நந்தனார் இரவுபக லோயாமல் தில்லைத்தலத்தைச் சுற்றிவருவதால் மிகவருத்தமடைந் துவருத்தக்கினால் மயங்கி சோர்ந்துநித்திரையடைந்தார் அந்தநித் திரையில் நடராஜமூர்த்திவந்து காக்ஷிதந்துசொல்வார் எனக்குமிக வும் பிரியமுள்ளநந்தனாரே உம்மிடத்தில்நம்முடையபத்தர்களாகிய வேதியர்களை வரச்சொல்லுவோம் அவர்கள்முன் நீர் அக்கினிப்பிர வேசமாகியெழுந்து மறைபடித்து வேதியர்களுடனேசபாபிரவேசம் பண்ணுமென்றுரைபகர்ந்து ஐயன் அந்தரத்தியானமானா நந்தனார் கனவில்தந்த காட்சியானதைக் கண்டு களித்து விழித்துதெளிந்து அளவில்லாத சந்தோஷங்கொண்டுநன்றியறிந்துசுவாமியைத்தோத் திரம்புரிந்து சொல்வார்.

கீர்த்தனம்-இ-ம்-தண்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

சந்நிதிவரலாமோ சுவாமி தெரிசனந்தரலாமோ  சந்

சரணங்கள்.

இல்லறவாழ்வாம்  பனிமூடி
இருந்தேனன்றோ  மிகவாடி
அல்லும்பகலும்  கொண்டாடி
அறியேன்கனக  சபைநாடி  சந்

வீதியிலேசற்றே  வந்திருந்தேன்
வேடிக்கைபார்த்துக்கொண்  டிருந்தேன்
சாதியிற்றாழ்ந்தவனென்  றறிந்தேன்
தனித்திருப்போமென்றிங்கே  வந்தேன்  சந்

காலால்வீசிக்கனல்  மூட்டி
காலைமதிமண்டலமே  லோட்டி
பாலாறுபெருகவேயெனைக்  கூட்டி
பார்த்ததுமில்லைநான்  தோட்டி  சந்

வ-ம். நந்தனார்தான்கண்ட சொற்பனத்தைக் கொண்டாடுவார்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேன் அதிசயமாய்ச்
சொற்பனங்கண்டுகொண்டேன்

அநுபல்லவி.

சொற்பனங்கண்டுகொண்டேன் எல்லாம் கற்பனையென்றறிந்தேன்
தற்பதவாக்கியமேவுருவாகி யற்புதநடனம்புரியயின்றுவேத(சொற்)

சரணங்கள்.

அம்பிகைமாளுள்மான்மழுவணிந்திடுஞ்செங்கோளன்செம்பொன்
னம்பலந்தனில்தாளமத்தளம்போடமறைகள்பாடகொண்டாட
மண்டலத்தோராசைதீர்ந்துமண்டபமணியோசைனேர்ந்து
மனதுருகமறலிருகவரந்தருகவரந்தருக (சொற்)

மங்கையர்போலாகநில்லாதாரையும் வருந்தியமைகரும்பொல்லாதா
ங்கிய, மாயப்பிணியைவெல்லமருந்துசொல்லவழிச்செல்லநல்லபண்
ணவர்,பாலகிருஷ்ணன்களிக்க உடுக்கைஎடுக்க உலகந்துறக்கசிறக்க

வ-ம். நந்தனார் தான்கண்டகனவுநிட்சயமோ பொய்யோவென்று சந்தேகப்படுகிறார்.

கீர்த்தனம்-இ-ம்-சூரியகாந்தம்-சாப்புதாளம்.

பல்லவி.

கனவோநினைவோ கண்டதுவீணோ
மனதிலுறுதிகொள்ள வழியொன்றுங்காணேன் கனவோ

நித்திரைதனிலொரு சித்தனுருவாய்வந்து
முத்திதருவேனென்று நத்திபேசினதுண்டு கனவோ

ஆருமிகழ்ந்துதள்ளும் நாரும்புலையனென்னை
வாரும்பரமபதஞ் சேருமென்றழைத்தது கனவோ

கிட்டநெருங்கிவந்து தட்டியெழுப்பியெர்ரு
வெட்டவெளியைக்காட்டி கட்டளையிட்டது • கனவோ

வசனம்.

நந்தனார்தான் கனவிற்கண்டதுபோலே சுவாமிவருவாரோ வாரா ரோவென்று சஞ்சலப்படுவார்.

சாமராகம்-ஆதிதாளம்.

பல்லவி.

வருவாரோவரந் தருவாரோ-எந்தன்
மனதுசஞ்சலிக்குதையோயிப்போது (வருவாரோ)

அநுபல்லவி.

திருவாருந்தென்புலியூர் திருச்சிற்றம்பலவாணன்
குருநாதனாகவந்தெந்தன் குறைதீர்க்கக்கனவுகண்டேன்
இருவினைப்பிணிகளைக் கருவறுத்திடுகிறேன்
பயப்படாதேயென்றுசொல்ல (வருவாரோ)

சரணங்கள்.

மறையாலும்வழுத்தறியா மகிமைபெறுநடராஜன்
நறைபூறுஞ்சேவடியை நம்பினவனல்லவோ
அநுதினஞ்சிவசிதம்பரமென்ற
வடிமையென்றருள் புரிந்திடயிங்கே (வருவாரோ)

பணிமார்புஞ்செஞ்சடையும் பார்க்கமனமுவந்து
பணியுங்கோபாலகிருஷ்ணன் துதிபரமதயாநிதி
பவக்கடலடிக்கடி பெருகுதுநிலைக்குமோ
மலைக்குதுகறையேற்ற (வருவாரோ)

வசனம்.

நந்தனார் இப்படி அனேகவிதமாய்வருவாரோ?வாராரோ? என்று பலவிதமாய்க் கொண்டாடுகிறார்.

## திருநாளைப்போவார்புராணம்.

விருத்தம்.

இப்பிறவிபோய்நீங்க வெளியினிடைநீமூழ்கி
முப்புரிநூன் மார்பருடன் முன்னணைவா யென்னமொழிந்
தப்பரிசே தில்லைவா ழந்தணர்க்கு மெரியமைக்க
மெய்ப்பொருளா னாருளி யம்பலத்தே மேவினார்.

வசனம்.

நந்தனார் கனவிலேவந்துசொல்லியநடராஜமூர்த்திதில்லைமூவாயிரம்பேர்கள் கனவிலேசொல்லுவார். பத்தர்களே? எனக்கு மிகவும் பிரியமுள்ள திருநாளைப்போவாரென்னும் நாமத்தைக்கொண்டுஎன்னை காணவேண்டுமென்றுதன்னைக்காணிக்கைகொண்டுசாதியிற்றாழ்ந்தவனென்று மிகவும்குறைகூறிக்கொண்டு இங்கேவரலாகாதென்று

பயந்துகொண்டு என்னைத்தவிரமற்றதெல்லாம் அநித்தியமென்று பத்திபண்ணிக்கொண்டு முத்தியடையவேண்டுமென்று தில்லையைச்சுத்திக்கொண்டு தெற்குகுளத்தங்கரையில்நின்று ஆடிப்பாடிஆனந்தங்கொண்டு யிருக்கிறார், அவரை என்னைப்போல் நினைத்து நீங்களெல்லாரும்போய் அக்கினியில்மூழ்கச்செய்து அழைத்துவாருங்களென்று சொல்லி சுவாமிமறைந்தார். இப்படிக்கண்டகனவைமூவாயிரம்பேர்களும் பேரம்பலவாசலில்வந்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுவார்கள்.

இராகம்-சங்கராபரணம்-அடதாளம்.

கண்ணிகள்.

அதிசயமொன்றுகேளப்பாதீட்சதரே
யர்த்தராத்திரிப்போதி லென்னே-என்றன்
மதிபரவசமாகத் துதிமருவுமப்படி
வாணன் கனவில்வந்தா ருன்னே
வாஸ்தவமெனக்குமிகுந்தவண்ணமாகக்கனவில்
வந்துரைத்தாரறிந்தேன் நாடி-உத
யாஸ்தமயமாகுமுன்னமருட்படிக்கு
வழைப்பதுத்தமமென்று ரோடி
அப்போதங்குவந்த அப்பண்ணுதீட்சதர்
ஆமாமிதுவும்நிச் சயந்தான்-என்கோன்
செப்பியசொற்படிச்செந்தீவளர்த்திடச்
செய்யவேண்டுமெவ சியந்தான்
அவசியமென்கிறீர்காரியந்தெரியாமல்
ஆருக்கடுக்குமோர் புலையன்-சிறந்த
தவசிரேஷ்டர்சூழுந் தலத்தில்வருவதற்குத்
தலைபத்தோ அவன்வந்தா லலைவன்
பத்தியுள்ளவனே பாமனுக்குயிர்த்தோழன்
பதஞ்சலிபுலிப்பாதர் சாட்சி-சிவன்
சித்தத்தின்படிசெய்து செனனக்கரைகடப்போம்
தெளிவீர்நீங்களிந்தச் சூட்சி
என்றாங்குசிவசங்கரதீட்சதர்
இன்னமுந்தாமச மேதோ-நீச்சன்
ஒன்றுந்திருச்சந்நிதிக்குவருவதற்கு
வொருக்காலுங்கட்குத் தகாதோ
சொல்லுமென்றாவராமென்றாருங்கள்
சித்தத்திலுள்ளசந் தேகம்-தெளிய

அல்லும்பகலுமேயாமேசாஸ்திர
மாராய்வதற்குமனோகர சாகரம்
தரும்படிபேசிச்சந்தேகந்தெளிவ
தத்திதன்றுரைத்த மொழியேநம்
பெருங்கூட்டமாகவேகூடிச்சென்றாரவர்
பேதமறத்தொரு வழியே

வ-ம். தில்லைமூவாயிரவர்கள் சாஸ்திரிமார்களிடத்தில் சந்தேகம் தெளிதல்.

விருத்தம்

மறைக்கிழவரிவ்விதஞ்சென்றார்களங்கே
மனுக்கியாணிகளாசீர்வாதஞ்செய்து
வந்தகாரியமேதோவுரைப்பீரென்ன
மற்றுளானவர்தங்கள்கனவிற்றோன்றி
குறைந்தமதிபுலைச்சாதிவந்துதித்தோன்
கோதிலாநந்தனென்போனவனல்லன்பண்
கூறுமிவ்வூரெல்லைவலம்வருவான்நாளை
கொணர்ந்தவனைத்தீமூழ்கச்செய்தேஅப்பால்
முறையொருசந்நிதியில்நம்முன்னாக
விடுங்களென்றருளிச்செய்தவர்மறைந்தார்
உணர்ந்தோமுன்னிதுதெரியச்சொல்லவந்தோ
மொழியுமாறுத்தரம்யாதென்றார்நீதி
அறிந்தவனோராமந்தப்படிக்கேசெய்வ
தழகாகுமென்றனர்பின்மகிழ்ச்சியாலே
அந்ததில்லைநாம்நகரத்தெல்லைசுற்றி
யாடுவார்நந்தனைத்தேடுவாரே.

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

தம்பெருமாள்பணிகேட்ட தவமறையோரெல்லாரு
மம்பலவர்திருவாயின் முன்பட்டமுடனின்று
எம்பெருமானருள்செய்த பணிசெய்வோமென்றேத்தி
கம்புரிவுபெருகவந்த திருத்தொண்டர்பாற்சார்ந்தார்.

வ-ம். தமதுபிரானாகிய சபாநாதரிட்டகட்டளையைக்கேட்ட தவம் பொருந்தியபிராமணர்களெல்லாருமம்பலவாணரது கோயிற்றிருவா

சல்முன்புகூடிபயத்தோடும் நம்முடைய ஆண்டவரருள்செய்தவழி பத்தைச் செய்வோமென்றுவணங்கி அன்புமேற்பட்டிருக்கும் திரு நாளைப்போவாரைத் தில்லைமூவாயிரவர் தேடவருகிறார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

தொண்டரைகாண்கிலமேதில்லையில்வந்துதொண்டரைகாண்கிலமே

அண்டசராசரமெங்கும்படியளந்து
மன்றுளாடியமன்னவர்க்கடிமை தொண்

சொல்லும்பொருளுமற்றுச்சோதிமயங்கொண்
டல்லும்பகலுமற்றம்பலவாணன் தொண்

அஷ்டதிசையும்பரிபூரணமாகவே
மட்டில்லாதுவளர்ந்தோங்கியநாதன் தொண்

வாசியடங்கிநடுவணைவழிகண்டால்
தேசிகவடிவுடன்தெரிசனந்தருவார் தொண்

பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியநாதன்
கோலச்சிலம்பணியுங்குண்டலநாதன் தொண்

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவார் தெரிசனங்காணத்
தில்லைமூவாயிரம் முனிவர்கள்வருகிறார் திரு

பத்திவெள்ளமது கரைபிரண்டோடும்
பரமானந்தக்கடல் முழுகாட்டும் திரு

அரகரசிவனென்று சொல்லும்
அநித்யசடத்துக் கபாயத்தைவெல்லும் திரு

அடியவர்மெத்தப் பெரியவரென்று
அம்பலவாண ரருள்விடைகொண்டு திரு

இதுவுமது-சிந்து.

பதம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

தேடித்திரிந்தார் பாரும்நந்தனார் தம்மைத்
தில்லை மூவாயிரவர்

அநுபல்லவி.

நஞ்சதுர்வேதப்பிர தாசனே
நடுங்கைசிவகாமிப்பிரா ணேசனே
ஆடும்பதநடன சபேசனே
ஆவலாகத்தொழுதேவரும் நேசனேத்-தேடி

சரணங்கள்.

தண்டாமரைமலர் தடமும்-மாதர்களாடிக்
கொண்டாணடித்திடு மிடமும்-அன்னமளிக்க
உண்டானந்தக்கூறு மிடமும்-சோரர்பரவுஞ்
சண்டாளர்வாழும்வா ழிடமும்-அன்றிச்சூத்திர
சாதிமுதலானபல வாடையும்-பல்லாண்டு
ஓதியுலாவிவரு மேடையும்-மனுவிக்கியான
நீதியுணர்ந்தோர்கள் மாடமின்னமும்பல
மாதிரிகளாகுந்திண்ணை மேடை-உன்னதமாகக்
கொங்குமிகுத்தவெங்குமணந்திடுஞ் சோலைகருப்பஞ்சோலை
தங்குமுயர்ந்துகதித்திடும்வாழையின் சோலைதாழையின்சோலை
தெங்குமிலுப்பையுமொன்றுபொருந்திய சோலை-காவினிற்சோலை
துங்கமதானபலாக்கமுகோங்கிய சோலை-மற்றுள்சோலை
எங்குஞ்சுற்றிப்பார்த்துமறையோர்கள் தங்கள்தங்களங்கமேங்க

நதியிதமும்.

பொங்கரவணிந்தசிவசங்கரன் கிருபையிதன்மேற் யோங்க

கூக்குரலிட்டுச்

சங்கையறச்சென்னியிற்கரங்களைக் குவித்தெங்களைத் தாங்க

மனமுவந்து

அங்கேயெங்கள்பங்கினிலிருந்து மேழைவருத்தம் நீங்க

கிருபைசெய்வதற்கு

உன்னதேகடனென்றுவந்துக்கொண் டாடி
உரியவேதமந்திராதிகள் பாடி
உன்னதஞ்சொன்னநந்தனார்வர நாடி
மூளுங்கொடைக்காரரெனவிரைந் தோடி
தேடித்தேடித்திரிந்தார்பாரும் நந்தனார்தம்மை

வ-ம். இந்தப்பிரகாரம்தில்லைமூவாயிரவர்களுந்தேடிஅலுத்து ஓரிடத்தில்யாவருங்கூடிசுவாமியைத்துதிசெய்கிறதென்று நிச்சயஞ்செய்துதோத்திரஞ்செய்கிறார்கள்.

தரு-இ௰ம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

உனதுமகிமையை யொருவரறிவார்களோ
உலகிலுள்ளோரையனே

சரணங்கள்.

கனவிலேவந்தெங்களுக்குச்சொன்ன அந்த
காரணமறிந்திக்காலையிலே யெழுந்த
இனத்தார்நாங்கள்யாருமிசைந்தொருமித் திந்த
எல்லைமுழுதுந்தேடியிளைத்தோமெங்களுக் கந்த
இணையில்லாநந்தனொருவனு மகப்பட
வில்லையென்னசெய்வோம் ஸ்திரப்பட-உனது
அடையவர்திரிபுரமனலாகவே முடித்து
வன்பாகமான்மழுவுங்கையிலே பிடித்து
விடப்பாகனேகாளிவெட்கும்படி நடித்த
மெய்யாதுயர்தவிர்த்தாளையாவென்றே படித்த
வாறுநீபுரிந்தருள்செய் ஐயனே
வசனங்கொர்ப்புதசரணத் துய்யனே-உனது
அன்னைசிவகாமியனுதினம்வளர் தில்லை
யம்பொன்னகர்வருவோர்க்காந்தொருதுய தில்லை
உன்னையன்றியுலகத்துக்குப்பொருளு மில்லை
யுத்தமனேயெங்கட்குரியதுணையு மில்லை
ஓதுநந்தனார்தம்மைவரச் செய்யும்
ஊழ்வினைதவிர்த்தவர்க்குஅருட் செய்யும்-உனது

வ-ம். இவ்விதமாகச் சுவாமியைத் துதித்துந் தில்லைமூவாயிரவர்களனைவரும் நந்தனாரைத்தேடி யலுத்துவரு மார்க்கத்தில் ஒதுப்புறமாக நின்றுக்கொண்டிருந்த நந்தனார்வேதியரைக்கண்டு தூரவிலகிநின்று தலைவணங்கிச்சொல்லுவார்:

விருத்தம்.

திட்டமுடன்பணிந்துமனமொடுங்கித்தவம்புரியுந்தில்லைமன்று
கட்டமிடநடராசன்கனவில்கண்டுசொன்னமொழிநம்பிக்கொண்டு

இட்டமுடன்திருநாளைப்போவாரிடம்வேதியர்களேகும்போது
கிட்டிநெருங்காதையுமென்றேயிலகியோர்வார்த்தைகேளீர்கேளீர்.

கீர்த்தனம்-இ-ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

கிட்டநெருங்கிவருகாதே சுவாமி-காதில்
கேட்டபேர்க்குபாவம்வரு மெனதுசென்மம் கிட்

சிட்டர்புகழுந்தில்லைகளில் செழித்துவாழும்வேதியர்கள்
இஷ்டமிதுவல்லவோ யென்றுசொல்லவேணுமோபுலையன் கிட்

உலகினில்கடைச்சாதி யென்தனுக்குவமையாருமில்லையே
பலவிததுஷ்டகருமஞ்செய்து பாரில்வந்தபுலையன் கிட்

வேலைசெய்துவுடம்புவளர்க்க வேணுமென்தநாயேன்
தோலுமெலும்புமுதுகினில்சுமந்து அலையும்புலையனேயே கிட்

வ-ம். இப்படி வணங்கிச்சொல்லிய திருநாளைப் போவாரைப் பார்த்து வேதியர்கள் சொல்லுவார்கள்.

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

சாதியிலுயர்ந்தாலென்ன இந்த பேரும்பெருமையுமில்லையே
சாதிப்பேருகொண்டதாலே சங்கரனுலகில்வந்து
ஆதரவுடன்வாங்களீய்ந்து அழைப்பாரோசேர்ப்பாரோ
அளிபெருகயீசன்கழலை யறிவிலுன்னியடிபணிந்து
தெளிந்திடாதபேரைமுத்திதேடுமோ நாடுமோகூடுமோசாதியில்

வ-ம். இப்படியே சொல்லியபின் தாங்கள் வந்தகாரியம் பேசுவார்.

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

ஐயரேயம்பலவா ருடாரவியப்பொழுதணைந்தோம்
வெய்யவனழைத்துமக்குத் தரவேண்டியெனவிளம்ப
நையுமெனத்திருத்தொண்டர் நானுய்ந்தேனெனத்தொழுதார்
தெய்வமற்றமுனிவர்களுந் தீயமைத்தோமெனமொழிந்தார்.

வ-ம். ஐயரே நடேசருடைய சட்டளையால் இப்போது வெவ்வி தமாகிய அக்கினியைமூட்டி உமக்கு அதில்முழுகும்படி கொடுக்க

வந்தோமென்று சொல்ல இளகிய மனதையுடைய திருநாளைப்போவார் அடியேன் கட்டைகடைத்தேறினேனென்று அவர்களைத்தொழுவார் தெய்வீகமாகிய வேதத்தை யுணர்ந்த பிராமணர்களும் நீவளர்த்தினேமென்றுசொல்ல நந்தனார்கேட்டுச் சந்தோஷமடைந்து நான் இன்றைக்குத்தான் முத்தனானேனென்று வேதியனைப்பார்த்துச் சொல்லுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-ஆதிதாளம்.

பல்லவி.

கண்டேன்கலிதீர்ந்தேன் பவக்கடல்கரையேறிவந்தேன் கண்

சோதிமறைமுடிவாஞ் சொல்லிறந்திடுமீசன்
பாதம்பணிவிடைசெய் பாக்கியவானுமைக் கண்

எல்லையைக்காணுமுன்னே யிருள்விலகுமுங்கள்
தொல்லையைக்காணுமுன்னே துன்பங்கள்தீர்ந்திடக் கண்

கள்ளங்கருகச்செய்யுங் கண்ணுதலையுங்கள்
உள்ளங்குடியாய்கொண்டா ருங்கள்தெரிசனம் கண்

வ-ம். நந்தனார் நான் சின்னசாதியா யிருந்தபோதிலும் தெய்வமிரங்கிற்றென்று சொல்லுவார்

கீர்த்தனம்-இ-ம்-தனாசாரி- ஆதிதாளம்

பல்லவி

எனக்குமிரங்கிற்றோ நான்மெத்தஎழைஜாதியல்லோ என

தனக்குள்தானாயிருந் தகிலப்பிரபஞ்சமுந்
தன்னுளடக்கும்பொன் னம்பலவன்கிருபை என

அல்லும்பகலு மருந்தவஞ்செய்யினு
மறியாரொருவரு மம்பலத்தெய்வம் என

நான்மறைமிகவும் நானறியேனென்
றோதியவுண்மை வுலகமறிய என

வ-ம். நந்தனார் என்னதவஞ்செய்தேனோ இவ்வுலகின்கண் யாவருக்குங் கிடைக்காதபாக்கியங் கிடைத்ததென்று சொல்லுவார்.

கீர்த்தனம்- இ-ம்-ஆகிரி-ரூபகதாளம்

அம்பலவாணனைத்தென்புலியூரானை நம்பிப்பணிந்தேனோ
அர்ச்சனைசெய்து கும்பிட்டிருந்தேனோ
தில்லைப்பதியில்வந்து எல்லைக்கடந்தேனென்று
அல்லலறுத்தேனோசஞ்சித வினையெல்லாம்வருத்தேனோ
தாண்டவமாடின ஆண்டவன்சேவடி
வேண்டிதுதித்தேனோமுக்குணங்களைத் தாண்டிக்கதித்தேனோ

எந்தனைனதென் றெந்தவேளைமாயுஞ்
சிந்தைநழுவிற்ரேசேர்ந்தவனென்று தந்தைநழுவிற்ரே
தெள்ளுதமிழ்பாடி யுள்ளமுருகியுள்ளில்
கள்ளங்கருகிற்ரேகருத்திலெட்டா வெள்ளம்பெருகிற்ரே
ஆசைவலையைப்போட்டு மோசப்படுத்தும்சில
பாசங்குலைந்தாரோ அளவிடா கிலேசந்தொலைத்தாரோ
பெண்ணுரிடுமாலுக் கொண்ணுதெனச்சடைத்
தண்ணுத்தணைந்தாரோ கருணைபோக்கு கண்ணுலணைத்தாரோ
அடுத்துவந்தவனென்று பிடித்தபேய்களையோட்டி
தடுத்தாளக்கொண்டாரோ பரமபதங்கெடுத்தாளக்கண்டாரோ

## திருநாளைப்போவார் புராணம்.

மறையவர்கள்மொழிந்ததற்பின் றென்றிசையின்மதிற்புறத்துப்
பிரியுருஞ்சுந்திருவாயின் முன்னுகப்பிஞ்சகர்தன்
இறையருளால்மறையவர்க ணெருப்பமைந்துகுழியேந்தி
பிறைபவர்தான்மனங்கொண்டோ பெரியகுழல்வலங்கொண்டார்.

வ-ம். அப்படிப் பிராமணர்சொல்லினபின்பு தென்திசையிலுள்ள மதிலின்புறத்திலே சந்திரனைது தவழ்ந்துபோகும்படி உயர்ந்திருக்கும் திருக்கோபுர வாசலுக்குமுன்னே சுவாமியின் நிறைந்த கிருபையோடுகூடிய கட்டளையால் பகர்ந்திருக்கின்ற நெருப்பின் குழியையடைந்து நடேசருடைய திருப்பாதத்தை மனதில்தியானித்து அக்கினியைஎற்றி வலமாகவந்தார்.

### இதுவுமது விருத்தம்.

கைதொழுதுநடமாடுங் கழலுன்னியழல்புக்கார்
எய்தியவம்பொழுதின்க ணெரியின்கணிர்ம்மலமாய்ப்
பொய்தகையுருவொழித்தும் விண்ணவராய்முனிவடிவாய்
மெய்திகழ்முன்னூல்விளங்க வேணியனுர்முடிக்கொண்டான்.

வ-ம். கையாற்கும்பிட்டு நடனஞ்செய்கின்ற நடேசரது திருப்பாதங்கள் மனதில் உறுதியாய்நினைத்து அக்கினியில் புகுந்தார். அப்படிச்செய்தபோது அந்தநெருப்பில் இந்த வுலகப்பந்தமாகிய நிலையில்லாத உடலத்தையொழித்துப் புண்ணியஞ்செய்கின்ற பெருமைபொருந்திய பிராமணமுனிவன் வடிவாய்த் தேகத்தில் பூநூல் விளங்கச் சடைமுடியோடும் எழுந்தார்.

இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

யாகோர்ப்பவமானர்-நந்தனர்-அரனருளால்
யாகோர்ப்பவமானர்

அநுபல்லவி.

யோகமாதவரும்-யோகவாழ்வினரும்
வேகமாய்ச்சுகமாகவந்துதொழ (யாகோர்)

சரணங்கள்.

சிவனருரைத்த வாக்கியம் சித்தத்திலெண்ணிச்
சிறந்ததேமிக சிலாக்கியம்
தவருதநேக பாக்கியம் பொருந்தவேடந்
தன்னைக்கொண்டதே யோக்கியம்
தவனனேடுயர் கவனமேவிவரு
மெவருங்காந்தருவ ரெவருங்கண்டுதொழ(யாகோ)

கையைச்சிரமேல் பதித்துசிவனேயென்று
கனகசபையைத் துதித்து
செப்பகுண்டக்கை வெடித்துகதிரவன்போற்
செனித்தாரதிலே நடித்து
சித்தாகியபத முற்றும்பாம்புப்புலி
பத்தியாய்த்தொழும் பதத்தைக்கண்டுதொழ(யாகோ)

காதிற்குண்டல மிலங்க முப்புரிநூலுங்
கதித்துமார்பிட மிலங்க
ஓதுஞ்சடைகள் துலங்க-அவரைவிட்டு
வோடியேவினை கலங்க
ஏகமற்றசதுர் வேதமோதிவரும்
நீதவேதியர்கள் பேதமின்றிதொழ(யாகோ)

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்

செந்தீமே லெழும்போது செம்மலர்மேல வந்தெழுந்த
அந்தணர்போற் றேன்றினே ரந்தாதுந் துபிநாதம்

வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கண் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரத்தின் பனிமலர்மாரிகள் பொழிந்தார்.

வசனம்.

சிவந்த நெருப்பினின்றும் எழுந்தபொழுது செந்தாமரைப் புஷ்பத்தின்மேல் உதயமாயெழுந்தருளும் பிர்மாவைப்போல் பிரகாசித்தார். பெருமைபொருந்திய ஆகாயத்தில் அந்தர துந்துபியின் கோஷ்டமானது உண்டாயிற்று தேவர்கள் சந்தோஷமாய் ஆரவாரித்து அழகாயிருக்கின்ற கற்பகவிருட்சத்தின் குளிர்ச்சிபொருந்திய மலர்களை வருஷமாகச் சொரிந்தார்கள்.

## பெரியபுராணம்.

விருத்தம்.

திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனங் களிப்பயின்றார்
அருமறைசூழ் திருமன்று ளாடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாரா மறைமுனிவர்.

வசனம்.

ஞானசம்பத்தையுடைய தில்லையில்வாழும் பிராமணர்கள் கைகூப்பினார்கள் பரவுதற்கரிய மற்றைச் சிவபதகர்களும் தொழுது மனதில் களிப்படைந்தார்கள். வேதங்கள் முழங்குகின்ற கனகசபையில் ஆடுகின்ற பாதத்தை வணங்கும்பொருட்டுத் திருநாளைப்போவாராகிய ஒரு வேதமுனிவர்வருகையி லானந்தத் தாண்டவத்தை வருணித்துச்சொல்லுவார்.

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்.

பல்லவி.

தாதெய்தெய்யென்றுடுவார்-அவர்-தத்தித்தெய்யென்றுடுவார்.

அநுபல்லவி.

ஆதிபராபரமாகியசித்து
ஆனந்தங்கொண்டொரு காலையெடுத்துத் (தாதெய்)

சரணங்கள்.

அண்டசராசரமெங்குங்நடுங்க
ஆதிசேடனார்முடிகணெருங்க (தாதெய்)

சீலம்பெருகியமுனிவர்கொண்டாட
திங்களுஞ்சூடியசெஞ்சடையாட (தாதெய்)

பார்புகழுந்தில்லைச்சிதம்பரநாதன்
பாலகிருஷ்ணன்பணிந்தேற்றியபாதன் (தாதெய்)

இராகம்-எமுனகலியாணி ரூபகதாளம்.

பல்லவி.

சபாபதியைப்பாடு-மனமே-மனமுருங்சனக (சபா)

அநுபல்லவி.

சபாபதியைப்பாடு சந்ததமுநீ கொண்டாடு நல்ல
சாதனங்களைத்தேடு பவசாகரந்தள்ளிப் போடு (சபா)

சரணங்கள்.

உலகமெல்லாமாயமென் றுறுதிகொள்வது ஞாயம்
தெரியாதுசம்பிரதாயம் அந்தப்பரம்பரையுள்ள ஞாயம் (சபா)

பாம்பின்வாயின்வேகம் அதுபோலவிஷய போகம்
சற்றுமறிவிலாததேகம் உனக்கேதுக்கிந்த போகம் (சபா)

பாலகிருஷ்ணன்போற்றும் பதம்பாவங்கள்குடிமாற்றும்
பரமானந்தம்வெளிதோற்றும் ஊவாதுக்கேயிருந்தோம் (சபா)

இராகம்-யமுன-கலியாணி-அடதாளம்.

பல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார்-அம்பலந்தனிலே-பொன்னம்பலந்தனிலே

அநுபல்லவி.

ஆனந்தக்கூத்தாடினார் அயனுமாலும்பாடினார்
அந்தரங்கமாகச் சிந்தித்தபேர்க்கருள்
தந்தோந்தந்தோமென்றுந் தொந்தோந்தொந்தோமென்றும் (ஆன)

சரணங்கள்.

பதஞ்சலிமாமுனியை நோக்கிப்
பார்த்தபேர்கள்குறையைப் போக்கி
இதமகிதமென்றறிவை நீக்கி
ஏகமாகக்காலைத் தூக்கி (ஆன)

மத்தளத்தாளமதிர முழங்க
வளரும்பிரமதகணங்க ளிலங்க
தத்திமிதக்கிடதோமென் றிலங்க
சபையுந்துலங்கச்சதங்கை குலுங்க (ஆன)

பாலகிருஷ்ணன்பணியும் பாதன்
பார்த்தபேர்கள்வரப்ர சாதன்
ஞாலம்புகழுஞ்சிவ போதன்
சுந்தரித்தாதன் அம்பிகை நாதன் (ஆன)

வசனம்.

இப்படி ஆடிய தாண்டவதரிசனங்கொடுக்க இன்றைக்குத்தான் சித்தமிரங்கிற்றேவென்று சொல்லுவார்.

இராகம்-யமுனா-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சித்தமிரங்கிற்றே யான்முன் செய்தவமுத்திற்றே (சி)

அநுபல்லவி.

அத்தாபரிசுத்தா வுன்னுடல் காணவந்தேன்
என்னையாண்டுக்கொள்ளிதுவேசமயமுன்னுடல்காணவந்தேன்

சரணங்கள்.

சாதிமுறைமைபோக்கும் என்னைச்-சதுர்மறையவராக்கும்
போதாதில்லைநாதா வுன்னுடல்காணவந்தேன்
பாலகிருஷ்ணன்போற்றும்-பாதா-பதஞ்சலியாரேத்தும்
சிலாதிரிசூலா வுன்னுடல்காணவந்தேன்
என்னையாண்டுக்கொள்ளிதுவேசமயமுன்னுடல்காணவந்தேன்

சிந்து.

கனவிலுருவாகி காட்சி-கொடுத்துக்கடாட்சித்தபின்
எரியினிடைமூழ்கி-வெகு-இன்பம்பெருகியவன்பருடன்
வேதமுனிவடிவாய்-தில்லை வேதியர்கைதொழுதாதரவாய்
அங்கம்புளகிதமாய்ச்-செம்பொன்.

வசனம்.

திருநாளைப் போவாராகிய முனிவர் அக்கினியில் குளித்தெழுந்து கனகசபையில்வந்து மனமுருகி ஆனந்தம்பெருகி எம்மாண்டவராகிய நடேசமூர்த்தியைத் தோத்திரஞ்செய்கின்றார்.

தேவாரம்.

பாளையுடைக்கமுகோங்கிப் பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந்தேறி வாழ்வயிற்றில்லைதன்னுள்
ஆளையுடைக்கழற்சிற்றம் பலத்தாடல்கண்டாற்
பிளையுடைக்கண்களாற்பின்னைப்பேய்த்தொண்டர்காண்பதென்னே

பொருவிடையொன்றுடைப்புண்ணியமூர்த்திபுலியதளன்
உருவுடையம்மலைமங்கைமணாளனுலகுக்கெல்லாந்
திருவிடையந்தணர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
றிருவடியைக்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (உ)

தொடுத்தமலரொடுதூபமுஞ்சாந்துங்கொண்டெப்பொழுதும்
அடுத்துவணங்குமயனொடுமாலுக்குங்காண்பரியான்
பொடித்துக்கொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவன்
உடுத்ததுகில்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (ந)

வைச்சபொருணமக்காகுமென்றெண்ணிநமசிவாய
வச்சமொழிந்தேனணிதில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபேர்நந்தியுந்தியின்மேலசைத்த
கச்சினழகுகண்டார்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (ச)

செய்ஞ்ஞின்றநீலமாகின்றதில்லைச்சிற்றம்பலவன்
மைஞ்ஞின்றவொண்கண்மலைமகள்கண்டுமகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின்றெரியும்விளக்கொத்தநீலமணிமிடற்றான்
கைஞ்ஞின்றவாடல்கண்டார்பின்னை கண்கொண்டுகாண்பதென்னே.

ஊனத்தைநீக்கியுலகறியவென்னையாட்கொண்டவன்
தேனைத்தெனக்கினியான்றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தருப்பவன்னஞ்சையுண்டகண்டத்திலங்கும்
ஏனத்தெயிறுகண்டார்பின்னை கண்கொண்டுகாண்பதென்னே. (சு)

தெரித்தகணையாற் றிரிபுரமூன்றுஞ்செந்தீயின்மூழ்க
வெரித்தவிறையவனிமையவர்கோமானிணையடிகள்
தரித்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (எ)

சுற்றுமமரர்சுராபதிநின்றிருப்பாதமல்லால்
பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டான்
செற்றங்களங்களைத்தீவிழித்தான்றில்லையம்பலவன்
நெற்றியிற்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (அ)

சித்தத்தெழுந்தசெழுங்கமலத்தன்னசேவடிகள்
வைத்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்தும்வயிரமுமாணிக்கந்தன்னுள்விளங்கியதூ
மத்தமலர்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௯)

தருக்குமிகுத்துத்தன்றோள்வலியுன்னித்தடவரையை
வரைக்கைகளாலெடுத்தார்ப்பமலைமகள்கோன்சிரித்து
வரக்கன்மணிமுடிபத்துமணிதில்லையம்பலவன்
னெருக்கிமிதித்தவிரல்கண்டகண்கொண்டுகாண்பதென்னே. (கO)

வேற்றாகி விண்ணாகி நின்றாய்போற்றி மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி, யூற்றாகியுள்ளே யொளித்தாய் போற்றி யோவாதசத்தத் தொளியேபோற்றி, யாற்றாகியங்கே யமர்ந்தாய்போற்றி யாறங்கநால்வேத மானாய்போற்றி, காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கக)

பிச்சாடல் பேயோடுகந்தாய்போற்றி பிறவியறுக்கும்பிரானே போற்றி, வைச்சா டனன்று முகந்தாய்போற்றி மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி, பொய்ச்சா புரமூன்று மெய்தாய்போற்றி போகாதென்சிந்தை புகுந்தாய் போற்றி, கச்சாக நாக மசைத்தாய்போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி (கஉ)

மருவார் புரமூன்று மெரித்தாய்போற்றி மருவியென் சிந்தை புகுந்தாய்போற்றி, யுருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி யுள்ளாவிவாங்கி யொளித்தாய்போற்றி, திருவாகிநின்ற திறமேபோற்றி தேசம்பரவப் படுவாய்போற்றி. கருவாகி யோடும் முகிலேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கங)

வானத்தார் போற்று மருந்தேபோற்றி வந்தென்றன் சிந்தை புகுந்தாய்போற்றி, யூனத்தை நீக்கு முடலேபோற்றி யோங்கி யழலாய் நிமிர்ந்தாய்போற்றி, தேனத்தை வார்த்த தெளிவேபோற்றி தேவர்க்குந் தேவனாய் நின்றாய்போற்றி, கானத்தை யேற்றுங் கண்ணேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கச)

ஊராகி நின்ற வுலகேபோற்றி யோங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி, பேராகி யெங்கும் பரந்தாய்போற்றி பேரானென் சிந்தை புகுந்தாய்போற்றி, நீராவி யான நிழலேபோற்றி நேர்வா ரொருவரை யுமில்லாய்போற்றி, காராகிநின்ற முகிலேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (க௫)

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய்போற்றி தேவ ரறியாத தேவேபோற்றி, புல்லுயிர்க்கும் பூட்சி யுணர்ந்தாய்போற்றி போகாதென்சிந்தை புகுந்தாய்போற்றி, பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி பற்றியுலகை விடாதாய்போற்றி, கல்லுயிராய் நின்ற கனலேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (க௬)

பண்ணி னிசையாகி நின்றாய் போற்றி பாவிப்பார் பாவ மறுப்பாய்போற்றி, பெண்ணு மெழுத்தஞ்சொல் லானாய்போற்றி யென் சிந்தை நீங்கா விறைவாபோற்றி, விண்ணு நிலனுந் தீயானாய்போற்றி மேலவர்க்கு மேலாகி நின்றாய்போற்றி, கண்ணின் மணியாகநின்றாய் போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கஎ)

இமையா துயிரா யிருந்தாய்போற்றி யென்சிந்தை நீங்கா விறைவாபோற்றி, யுமைபாக மாகத் தணைந்தாய்போற்றி யூழியே ழான வொருவாபோற்றி, யமையா வருநெஞ்ச மமர்ந்தாய்போற்றி யாதிபுராணனாய் நின்றாய்போற்றி, கமையாகி நின்ற கனலேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கஅ)

மூவாய் பிறவா யிறவாய்போற்றி முன்னமே தோன்றி முளைத்தாய்போற்றி, தேவாதி தேவர்தொழுந் தேவேபோற்றி சென்றேறி யெங்கும் பரந்தாய்போற்றி, யாவா வடியேனுக் கெல்லாம்போற்றி பல்லனலிய வலைந்தேன்போற்றி, காவாய் கனகத் திரளேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (க௯)

நெடிய விசும்பொடு கண்ணேபோற்றி நீளவகல முடையாய் போற்றி, யடியு முடியு மிகலிப்போற்றி யங்கொன் றறியாமை நின் றாய்போற்றி, கொடியவன் கூற்ற முதைத்தாய்போற்றி கோயிலா வென்சிந்தை கொண்டாய்போற்றி, கடிய யுருவொடு முன்னேபோ ற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. உ௦

உண்ணா துறங்கா திருந்தாய்போற்றி யோதாதே வேத முண ர்ந்தாய்போற்றி, எண்ணா விலங்கைக்கோன் றன்னைப்போற்றி யிறை வாவிரலால் வைத்துகந்த வீசாபோற்றி, பண்ணா ரிசையின்சொற் கேட்டாய்போற்றி பண்டேயென்சிந்தை புகுந்தாய்போற்றி, கண் ணாயுலகுக்கு ணின்றாய்போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி.

சிந்து.

அம்பலமேவிய சம்பிரமத்தைக் கண்டா ரறிந்திலரால்

## திருநாளைப்போவார் புராணம்

### விருத்தம்.

தில்லைவா ழந்தணரு முன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான்மழுக்கரத்தாற் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
யெல்லைபோ யுட்புகுந்தா ருலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால்.

### வசனம்.

சைவபுராணமாகிய பெரியபுராணத்தில் திருநாளைப்போவார் நா யனுரென்னு மியற்பெயர் சேக்கிழார்சுவாமிகள் சொல்லியிருப்பதா லிடையில் நந்தமாமுனியென்று வழங்குகின்ற நாளைப்போவார் தில் லைமூவாயிரமுனிவர்களோடேகூட பொன்னம்பலம்வந்தார் அதற்க ப்பாலவரைக் கண்டபேர்களில்லையென்று பெரியபுராணம் பாடியரு ளிய சேக்கிழார்சுவாமிகள்சொன்னது அந்த திருநாளைப்போவாரெ ன்னு முனியானவர் புரட்டாசிமாசம் உரோகணி நட்சத்திரத்தில் கனகசபையில்வந்து கற்பூரசோதியைப்போல் தோன்றிய சிவசாரூ ப்பியத்தை யடைந்தாரென்று உபமன்னிய மகாரிஷி பண்ணியபக்த விலாசத்திலேயும் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதுவுமது விருத்தம்.

அந்தணர்க ளதிசயித்தா ரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மையினை மாசறுத்துச்
சுந்தராந்தா மரைபுரையுந் துணையடிக டொழுதிருக்க
வந்தமிலா வானந்தப் பெருங்கூத்த ரருள்புரிந்தார்.

வசனம்

மறையோர்கள் ஆச்சரியப் பட்டார்கள், அரிய முனிவர்கள் ஸ்தோத்திரஞ் செய்தார்கள். முடிவில்லாத ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாதர் தமது கட்டளையால்வந்தடைந்த திருநாளைப்போவார்க்குத் தீவினையாகிய களங்கத்தைநீக்கி அழகாகிய தாமரை மலரையொத்த இரண்டு பாதங்களையுந் தொழுதிருக்கும் படியாகத் திருவருள் புரிந்தார்

விருத்தம்.

மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசிமறை முனியாகி யம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாய்த்துத் திருநாளைப் போவாரும்
மாசகல முயன்றுதிரு நடங்கொண்டு மகிழ்வுற்றார்.

வசனம்

தமக்கு முன்னிருந்த உடலாகிய மாசு தீரும்பொருட்டு அக்கினியாகிய திருமஞ்சனமாடி யெழுந்து குற்றமற்ற பிராமணமுனி வடிவமாகி நடேசருடைய திருவடியை அடைந்தவராகிய திருநாளைப்போவாருடைய பதத்தைப்புகழ்ந்து தீவினையாகிய கயிறு அறும்படித் தில்லை மூவாயிரவர்கள் போற்றி செய்துக்கொண் டிருந்தார்கள்.

வாழிவிருத்தம்.

பங்கய மாதவர் வாழி பராமக ளுமையாள் வாழி
செங்கண்மா லயனும் வாழி தேவர்காந் தருவர் வாழி
தங்குநான் மறைகள் வாழி தாரணி யரசர் வாழி
பொங்குநூல் வல்லார் வாழி போதவென் னுளும் வாழி.

## மங்களம்.

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

திருநாளைப்போவாருக்கு ஜெயமங்களம்
தில்லைமூவாயிரவர்க்குச் சுபமங்களம்(திரு)

அநுபல்லவி.

இருடிகளிதுவரி தரிததிசயமென
விருகாமுடிமிசை மருவத்துதிசெய்கன
பரவுமும்பர்சம்பிரமங்கள் துதித்திடும்
பரமனுமெம்பலத்தில் கதித்திடும் (திரு)

சரணங்கள்.

திருவாசகமும் திருக்கோவை பாடினவர்க்கும்
சீர்காழியிலுதித்தசிறந்த சம்பந்தருக்கும்
ஒருமாதிடத்திற்றூதுக்குவந்து விடுத்தவற்கும்
ஒருவரொப்பில்லாத்திருநாவுக் கரசருக்கும்
உரியமறைக்குமுயர்கலைகட்கும் உரகர்பதிக்குமுவணபதிக்கும்
ஓதுசந்திரசூரியர் முனிவர்களுக்கும்
திதிலாபாவலர்முத லனைவர்க்கும்(திரு)

திருநாளைப்போவாரென்னும்

## நந்தனார் சரித்திரக்கீர்த்தனை.

முற்றிற்று.

---





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பரக்கும்மி.

——:0.——

## விநாயகர் துதி.

சீர்மேவுந்தில்லையம்பலத்தில்-அன்பு
சேரக்கும்மிதமிழ்பாடக்
கார்மேவுமேலக்கோபுரவாசல்
கற்பகப்பிள்ளையார்காப்பாமே. (க)

## முக்குறுணிவிநாயகர் துதி.

சர்க்கரைமோதகந்தேங்காயுங்கொண்டு
சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
முக்குறுணிப்பிள்ளையாரைவேண்டி
முழங்கிக்கொம்மியடியுங்கடி. (உ)

## சுப்பிரமணியர் துதி.

கோலமயிலின்முதுகேறி-வந்து
கும்பமுனிக்குவருட்செய்யும்
பாலசுப்பிரமணியன்பீஜாட்சரத்தைப்
பாடிக்கும்மியடியுங்கடி. (௩)

கங்காதேவிக்குக்கைகூப்பி-யாரும்
கையிலெடுத்துளளேபானம்பண்ணி
தங்காமற்சிவகாமிசந்நிதி
சார்ந்துகும்மியடியுங்கடி. (௪)

கருதுஞ்சுருதிநெட்டாத-சிவ
காமசுந்தரிவாசலிலே
விருதுபேசியேசிறுதுழந்தைகள்
வேதம்படிக்குதுபாருங்கடி. (௫)

நாலுபுரத்திலுங்கோபுரமா-மதி
னடுவிலெங்கினுமாளிகையாம்
காலோராயிரங்கொண்டொருமண்டபம்
கட்டியிருக்குதுபாருங்கடி. (௬)

தூயமறைமுதலாராய்ந்து-மிங்கே
துலங்கியமூவாயிரவர்
ஞாயம்பொருந்தியதேவசபைவந்து
நாடிக்கும்மியடியுங்கடி. (௭)

சாந்துபொட்டுதளதளென-நல்ல
சந்தனவாடைகுமுகுமெனக்
கூந்தலழகிக்காரியெல்லாங்காலைக்
குவித்துக்கும்மியடியுங்கடி. (௮)

அஸ்தகடகம்பளபளென்னசொல்லும்
அரைஞாண்மாலைத்தளதளென்ன
விஸ்தாரமாகநின்றுகொண்டுகையை
வீசிக்கும்மியடியுங்கடி. (௯)

கையதனில்விபூதிப்பையுங்கொண்டு-அவர்
கண்டத்திலுருத்திராக்ஷமாலைபூண்டு
வைதீகபூசைகள்செய்கின்றதீட்சதர்
வாழக்கும்மியடியுங்கடி (௧௦)

கோவிலுக்குநாலுபேர்களுண்டாம்-அவர்
குறித்தமுறையாய்ப்பூசைசெய்ய
பாவித்தபின்பவர்வேறொருவர்வசப்
படுத்துவாரென்றேகும்மியடி. (௧௧)

ஆண்டுக்குளாறபிஷேகமுண்டாம்-பின்னும்
அதிலேரெண்டுதிருநாளாம்
வேண்டிவந்தவர்கள்கலிதீருமென்று
விரைந்துகும்மியடியுங்கடி. (கஉ)

பூமிபுகழ்ந்திடும்தில்லைப்பதி-யது
பூலோகக்கயிலாசமென்று
தாமரைப்பூவினில்வாழ்கின்றலட்சுமி
தாயார்சந்நிதிபாருங்கடி. (கங)

மூலஸ்தானத்தைக்கண்டாயே-நல்ல
முத்திபிதுவென்றுகொண்டாயே
காலெடுத்தாடியஙிர்த்தசபேசரைக்
கண்டுதெரிசிப்போம்வாருங்கடி. (கச)

தில்லைமாகாளியோடிவர-அவள்
சித்தங்கலங்கித்தலைகுனிந்தாள்
வெல்லுவதெப்படியென்றொருகாலை
விண்ணிலெடுத்தார்பாருங்கடி. (கரு)

நெற்றியில்வேர்வைமுத்திழந்து-மெத்த
நேத்தியதாய்ப்பரந்தோடிவர
பத்தியுடன்பொன்னம்பலவாணனைப்
பணிந்துகும்மியடியுங்கடி. (கசு)

தித்தியென்றீசனடம்புரிய-மெய்த்
தேவர்கள்பூமழைதான்சொரிய
மத்தளங்கொட்டியேகோபாலகிருஷ்ணனை
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. (கஎ)

சிதம்பரமென்றுசொல்லாமல்-விச்
சித்திரக்கூடமென்றுசொல்லி
நிதங்கொண்டாடுமையங்காரர்கள்வந்து
நின்றிருக்கிறார்கள்பாருங்கடி. (கஅ)

காணிக்கைகொண்டுவாருங்கடி-யிந்தக்
கனகசபையைப்பாருங்கடி
மாணிக்கவாசகர்புகுந்தவாசலை
மதித்துக்கும்மியடியுங்கடி. (கக)

அன்னமுடன்பால்தேன்கனியும்-நெய்யும்
அபிஷேகமுண்டெந்நாளும்
பொன்னம்பலந்தனிற்சந்த்ரமௌலியைப்
போற்றிக்கும்மியடியுங்கடி. (உ0)

முத்தியளித்திடுஞ்சந்நிதிக்குச்-சொல்லும்
மேளமுந்தாளமுமேதுக்கடி
சத்தப்பெருகியகண்டாமணியோசை
சந்நிதிக்சேர்வையாம்பாருங்கடி (உக)

புட்டுவடையுந்தேன்குழலும்-மணம்
புத்துருக்குநெய்ச்சம்பாவும்
சட்டப்படிதவறுமலையன்
சந்நிதிக்சேர்வையாம்பாருங்கடி. (உஉ)

சுற்றிவந்துச்சியைப்பாருங்கடி-நல்ல
சோதிமயக்கம்பமொன்பதடி
தத்துவங்கள்தொண்ணூற்றாறுங்கூடிச்
சமைந்தசபையைப்பாருங்கடி. (உங)

பாவிகள்கண்ணுக்குச்செப்போடு-உற்றுப்
பார்த்தாற்பத்தரைமாற்றுத்தங்கம்
கோவைபாடியமாணிக்கவாசகர்
கோவிலழகையும்பாருங்கடி. (உச)

அஞ்செழுத்தாலேமதிலுண்டாம்-பர
மானந்தக்கும்பமுமங்குண்டாம்
அஞ்செழுத்துப்படிக்கப்பாலே-பிர்ம
மானந்தத்தாண்டவம்பாருங்கடி. (உரு)

கோடியுகந்தவஞ்செய்தாலு-மிந்தக்
கோவிலைப்பார்க்கமுடியாது
ஆடியபாதத்தைக்கண்டாருக்கிணை
யாரென்றுசொல்லுவோம்பாருங்கடி (உசு)

நெற்றியிலேதிருநீறணிந்து-என்றும்
நிஷ்களமாகியசிற்சபையில்
நித்திக்கவேசிவநாமத்தைப்பூசிக்குந்
தீட்சதர்கூட்டத்தைப்பாருங்கடி. (உஎ)

வெட்டவெளியிற்றிரைதிறந்து-யார்க்கும்
வேதியர்தீபமுங்காட்டிவர
சட்டமுள்ளசிவசிதம்பரமென்று
சாய்ந்துகும்மியடியுங்கடி. (உஅ)

தில்லைவெளிதன்னைக்கண்டேண்டி-என்
தேசம்பரவசங்கொண்டேண்டி
அல்லலறவாசல்நின்றேண்டிமிக்க
ஆனந்தத்தாண்டவம்பாருங்கடி. (உகூ)

ஆகாயலிங்கத்தைக்கண்டேண்டி-இங்கே
யாருமறியாமல்நின்றேண்டி
ஏகாந்தமாகவிருந்தேண்டிமன
தேக்கந்துலைந்ததுபாருங்கடி. (௩0)

சித்தஞ்சிதம்பரமாச்சுதடி-முன்பு
செய்தவினையெல்லாம்போச்சுதடி
சுத்தபிர்ம்மமயமாச்சுதடியதைச்
சொல்லத்தெரியுமோபாருங்கடி. (௩க)

சாதிபேதங்களற்றேண்டி-இந்தச்
சாஸ்திரமனைத்தையும்விட்டேண்டி
போதமயக்கந்தெளிந்தேண்டியன்பு
பொருந்தக்கும்மியடியுங்கடி. (௩உ)

நாடுந்தைப்பூரணபூசத்திலே-தில்லை
நாயகன்குருவாரத்திலே
ஆடியநாடகம்பாம்புபுலிதனக்
காமென்றுகும்மியடியுங்கடி. (௩௩)

சஞ்சிதக்கர்மங்கள்விட்டேண்டி-பவ
சாகரத்தையொழித்திட்டேண்டி
குஞ்சிதபாதத்தைத்தொட்டேண்டிமனங்
கூர்ந்துக்கும்மியடியுங்கடி. (௩௪)

சொல்லும்பொருளையுமற்றாயோ-முன்
துன்பமனைத்துமொழிந்தாயோ
அல்லும்பகலையுமற்றாயோ-தில்லை
யானந்தத்தாண்டவம்பாருங்கடி. (௩௫)

விதியெழுத்தைக்கிழித்தாச்சு-முன்
　　விட்டகுறைவந்துதொட்டாச்சு
மதியமிர்தமுமுண்டாச்சுதென்று
　　வாழ்த்திக்கும்மியடியுங்கடி. (கூ

கோவிலுக்குள்ளேயநேகமுண்டு-அந்தக்
　　குறிப்பறிந்ததைச்சொல்லுவீரேல்
தேவரகசியம்பள்ளியறைவந்து
　　தெளிந்துக்கும்மியடியுங்கடி. (கூ

சண்டேஸ்வரர்தமைப்பாருங்கடி-அந்த
　　சந்நிதிக்கேகையைக்கொட்டுங்கடி
மண்டலர்புகழுமழகர்வாசலில்
　　வாழிபாடுவோம்வாருங்கடி. (கூ

வீட்டுக்கவலைகள்விட்டொழியா-மெத்த
　　வீம்புகள்பேசியேவீணலைவார்
பாட்டைப்படித்தாலும்சிதம்பரம்வந்த
　　பலனதல்லவோபாருங்கடி. (கூ

புத்திரபாக்கியமெத்தவுண்டாம்-பசும்
　　பொன்னுமணிப்பூஷணமுமுண்டாம்
பத்தியுடனேகோபாலகிருஷ்ணன்தினம்
　　பணியக்கும்டியடியுங்கடி (உ

எத்திசையோரும்படித்திடவே-தமிழ்ப்
　　புத்தகரூபமாயுண்டாக்கும்
பத்மநாபவிலாசம்பிரசை-நாளும்
　　பாடிக்கும்மியடியுங்கடி. (உ

சிதம்பரக்கும்மி-முற்றிற்று.

---

